

ஓவியம்: பத்மினி

# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி



1 தேவடி தெரு
சென்னை-4

12

செப்டம்பர் 1971
30 காசு

# உள்வெளி

எம். சுப்பிரமணியன்

"நீங்களா?" என்ருன் என்னைப் பார்த்தவுடன். அதிர்ச்சி அவனைச் சவுக்கால் அடித்திருக்கவேண்டும். எதிர்பாராது எதிர் கொண்ட சந்திப்பு. அவனும் அவளும் ஓடிப்போய் இன்றைக்கு ஒரு வருஷமாகிறது அவளுக்குச் சந்நதித் தெருவில் கோவிலை ஒட்டிய வீடு. குருக்களின் ஒரே ஆஸ்தி அவள்தான். பெயர் அம்பிகா. கூப்பிடுவது 'அம்பே அம்பே' என்று. ப்ரவசனச் சக்ரவர்த்தி பிரும்மஸ்ரீ கோபால கிருஷ்ண சாஸ்திரிகள் அவளைப் பற்றிச் சொல்ல வேண்டும். கேட்க வேண்டும்.

"கொழந்தைக்கு திவ்யமான சாரீரம். திவ்யமான குணம். திவ்யமான பேச்சு. அதிதிவ்யமான நடத்தை. எல்லாத்திலேயும் ரொம்ப திவ்யமான கொழந்தே அது. கொழந்தைகள்னு இப்படின்னு பொறக்கணும்' நம்மதேசம் ரொம்பப் புண்யதேசம். முனிவாளும் முனி குமாராளும், வேதசிரோன்மணிகளும் காலங்காலமா தர்மத்தெ வளர்த்த தேசம். இம்மாதிரி நாலு சத் கொழந்தைகள் பொறந்தா அப்பறம் வாசக்டமி எதுக்கு நிரோத் ஏதுக்கு? சுபிட்சம் பொங்கிப்பிடாதா பொங்கி...' உண்மை. குழந்தை தெருவில் நடந்தால் ஆயிசுக்கும் பார்த்துக் கொண்டிருக்கலாம். சிலாகிக் கத்தக்க பேச்சு. பவ்யம்.

அவள் நினைத்திருந்தால் மன்மதனே அவளுடன் ஓடிவரச் சம்மதித்திருப்பான். ஆனுல் கிச்சாமியுடன் தான் அவள் ஓடிப்போனுள். அவன் அழகனல்ல. ஒட்டைக் கொம்பின் நுனி போன்ற முகம். தலையில் அடித்துக் கையில் கொடுத்தால் வாங்கிக்கொள்வான். அக்ரஹாரத்தில் நாயாய் உழைப்பான். மற்றபடி அவன் ஆண்பிள்ளைதான். இவர்கள் ஓடிப்போன மூன்ரும் நாள் அவள் தகப்பன் விஷங்குடித்துச் செத்தான், இருவருமே அதற்கு வரவில்லை. ஊராரால் நடக்க வேண்டியது நடந்தது. ஓடிப்போன ஒருவாரத்திற்குப் பின் ஒரு நாள் இரவு கொல்லை வழியாக வந்து என்னைப் பார்த்தார்கள். அதற்குப் பிறகு இதோ இப்போதுதான் பார்க்கிறேன். நிமிடத்துக்கு நூறுதடவை 'மாமிமாமி' யென்று என்னைச் சுற்றிச்சுற்றி வருபவன், வந்தவன் அவன். ஒரு வருடமாக ஒரு கால்கடுதாசு கிடையாது.

"சௌக்யமாடா கொழந்தே?"

"ம்..." இழுத்தாற்போல் முகம் வக்கிரமாய்க் கோணச் சொன்னுன். அவனைப் பார்த்தேன். முகம் முழுவதும் அடர்ந்து கனத்த ரோமம் மீசைக்கும் அடர்ந்த தாடிக்கும் இடையில் வற்றி உலர்ந்துபோன உதடுகள். விழிக்கோளத்தில் ரசமிழந்து தேடிக்கண்டு பிடிக்கவேண்டிய கண்கள். இவை இரண்டிற்கும் சௌஜன்யம் ஏற்படுத்த முயலுவது போன்ற ஒரு காய்ந்த சிரிப்பு. அவன் இல்லை இவன். அவன் கைகளில் ஒரு குழந்தை. வயது ஒன்றிருக்கும். துருதுருவென்று அலையும் கண்கள். அவளைப் போலவே அதே அச்சு.

"ஆத்துலே சௌக்கியமா?"

"பேஷா ஆ"

"கொழந்தைக்கி என்னபேர் வெச்சிருக்கே?"

"வைக்கலை" —எங்கோலயித்த குரலில்பதில்.

"இன்னமா"

"என்னது?"

"பேரு..."

"பேரா ஆ...ஓ...வைச்சாச்சே...வெச்சாச்சு, வெச்சாச்சு" அவனைக் கூர்ந்து பார்த்தேன். "எங்கயோ ஞாபகமா" என்று பல்லைக்காட்டினுன்.

"இங்கதான் இருக்காப்லியா?"

"ஊம்"

"வந்ததிலேந்தா"

"ம்..."

"அப்புறம் வருவேன்னு நெனச்சேன்"

அவன் என்னைக் கீழ்க்கண்ணுல் பார்த்தான். உலகமே எரிந்து அழியட்டும் என்பதுபோல முகம் கோண ஆகாயத்தைப் பார்த்தான். காய்ந்த உதடுகளை ஒருதடவை நீவினுன். மூக்கை 'விர்' என்று உறிஞ்சி இழுத்துத் துப்பினுன்.

"ரொம்ம...ஹப்பா...அதெ எப்படிச் சொல்றது? தெனம் தெனம் எதிர்பாத்தேன் ஒன்னை...ரெண்டு வரி கிறுக்க முடியலே நோக்கு"

"நானும் வரணும்னுதான் நெனச்சேன்" தலையைக் குனிந்து கொண்டு சொன்னுன்.

"பின்ன ஏன் வரலை?"

"வரமுடியாம ஆயிடுத்து"

"அப்படி என்ன?"

"நீங்க ஒரு நிபந்தனை போட்டேளே"

"நானு?"

"ம்..."

"என்னது"

"அன்னிக்கி நானும் அவளும் கொல்லையாலே வந்துட்டுப் போனப்போ இன்னமே வரச்சே 'வூசலால வாங்கோன்னேள்" அவன் குரல்நைந்திருந்தது. கால்கட்டைவிரலால் மண்ணில்எதையோ எழுதி எழுதிஅழித்தான். இரண்டு மூன்று லாரிகள் புழுதியை வாரியடித்துக் கொண்டு விரைந்தன.

"வரதானு நேக்கு ரொம்ப சந்தோஷம்"

ஏறிட்டேன்.

''அவ ரொம்பச் சந்தோஷப்படுவா!'

''வரேன்''.

அவன் முன்ஞல் நடந்தான். அவளுக்கு அவன் சேர்க்கை இல்லே தான். இது ஊரே ஆச்சரியப்பட்ட விஷயம். இருந்தாலும் அவன் அதிர்ஷ்டக்காரன். சற்று நீளமான தெரு; அகலமும் கூட. கொஞ்சம் நடை. பின் இடதுகைப்புறம் ஒரு 'ட' ஞ வளேவு. அதன் கோடியில் ஒருவீடு. சிறியதுமில்லே. பெரியதுமில்லே. குங்குமச்சிமிழ் மாதிரி அப்படியொரு கச்சிதம். நேர்த்தி. வாசற் முகப்பிலேயே நிற்க வைத்து, மனித ஜனஜனத்தைத் தவிரவேறு எங்கோ எதையோ கருணே பொங்கப் பார்க்கும் மீனுட்சியின் படம். படமா அது...? எதிரேயே நிற்பது போல.

''என்ன நின்னுட்டேள்?''

''ஒண்ணுமில்லே ரொம்பதீர்க்கமா இருக்கு''

''வாசல்தானே?''

''இல்லே படம்''

''எதாஞ என்ன எல்லாம் மேலதான்''

''என்னது?''

''தீர்க்கத்தைச் சொல்றேன்'' அவன் உதடுகளில் அவளேச் சாப்பிடும் அதே சிரிப்பு. அதே குரலில் சொன்ஞன்.

''தலெயக் குனிஞ்சிண்டு வாங்கோ இடிச்சூடப் போறது! ஒசரம் போருது''

உள்ளே நடந்தான். சற்று வீச்சான ரேழி. துப்புர வாய்த் துடைத்தார்ப் போலிருந்தது. சுவரில் பெரிய தாகஸ்வாமி படம். படத்தின் கீழ் கோலமிட்ட ஒரு பலகை. பலகைமேல் ஒரு வெள்ளித்தட்டு. தட்டு நிறையஅபிஷேகித்தபால்; அதில் சாமந்திரேக்குகளும் ரோஜா இதழ்களும் மிதக்கின்றன. உள்ளே அம்பாள் அமிழ்ந்திருக்கிருள். ஊதுவத்தியின் ரம்யமான மணம். குத்துவிளக்கடியில் இழுத்து மூடிய வீணே.

''வீணேவருமா அவளுக்கு...நேக்குத் தெரியாதே''

''நேக்குத்தான்''

'நோக்கா?' - கேட்காமல் கேட்ட பார்வை.

''பூர்வத்திலே கொஞ்சம் ஈடுபாடு உண்டு. இப்ப அப்பப்பக் கொஞ்சம் தொட்டுப் பாத்துக்கறது''

எனக்குத் தெரியும். அவனுக்கும் வீணேக்கும் ஸ்நானப் ப்ராப்தி கூடக்கிடையாது. கால ஓட்டத்தில் எவ்வளவு மாறவில்லே?

''அவ இல்லேயா?''

''கோவிலுக்குப் போயிருப்பா''

அவள் எப்போதும் அப்படித்தான். கோவில், குளம், பஜனே, ப்ரவசனம் இவைகளில்தான் அவள் முகம் அதிகம் தெரியும். சத்குழந்தை. உபன்யாஸங்களில் அவள்தான் தட்டெடுப்பாள். ஏற்று, நடத்தி, முடித்து எல்லாமே அவள்தான். ஊரே அவளேச் சொல்லும்.

'பொண்ணுன்ஞ அப்படீன்ஞ இருக்கணும்.'

''இப்பிடி ஒக்காருங்கோ'' ஒரு பாயை இழுத்துப் போட்டான். சமையல் உள்ளே நோக்கி நடந்தான்.

''என்னடா என்ஞ பண்ணப்போறே?''

''சும்மா இருங்கோ செத்த, நேக்குத் தெரியும் எல்லாம்'' சொல்லி முடிக்கவில்லே. 'டேய் லூஸ்மாமா,' என்று ஒரு கீச்சுக் குரல். நடையில் ஒரு நாலுவயது முகம் தெரிந்தது. ஓடி வந்து அவன் கால்களேக் கட்டிக் கொண்டது. உருக்கிவார்த்த அதே பொன் நிறம். அவனே விட அவளுடைய சாயல்தான் அதிகம். ஒரு ரசமான மின்னும் கலவை.

''மாமா''

''என்னடா, என்ன வேணும்?''

''அந்தப் பந்தெ எடுத்தாயேன்''

''ஏன் நீ எடுத்துக்கப் படாதா?''

''நீ ஏதுக்கு இருக்கியாம்?'' சாப்பிடும் சிரிப்பு முகத்தில் விரிய என்னேப் பார்த்தான். சொன்ஞன்

''நாஞ சாப்பிட்றதுக்கு... தூங்கறத்துக்கு... 'ஓ' போறதுக்கு''

''அப்பறம் அம்மாட்ட சொல்லுவேன்''

''சொல்லிக்கோயேன். நேக்கென்ன பயமா?''

''அப்பிடியா, இரு இரு அம்மா வரட்டும்'' கருவிக் கொண்டே போயிற்று குழந்தை. இந்தத் தடவை அவன் சற்று வாய்விட்டே சிரித்தான்.

''என்ன பாக்கறேள் மாமான்னு கூப்பிடறதேன்ஞ—அதான் இப்ப லேட்டஸ்ட் ஃபாஷன்'' உள்ளே போஞன். சுற்றிலும் பார்வையை அலேய விட்டேன். எல்லாமே ரம்யமாக இருந்தது அவள் இருக்குமிடம் ரம்யமாகத்தான் இருக்க முடியும். சந்தேகமில்லே. 'காபி'யைக் கொண்டுவந்து வைத்தான். கொஞ்ச நேரம் மௌனம்.

''ஆறிடப் போறது குடியுங்கோ''. காபி சற்று குமட்டுகிற தித்திப்பு. குடிக்கையில் கீழ்க்கண்ணில் அந்தத் தாடி நெருடிற்று. எவ்வளவு அடர்த்தி...

''அம்பே! அம்பே! அடியே அம்பே'' அழைத்துக் கொண்டே வந்தது ஒரு குரல். இரட்டை நாடி சரீரம். உடம்புக்கு நாற்பது, தலேக்கு அறுபது போடலாம். தெரு நாயின் பசியை நினேவூட்டும் கண்கள். மைனர் செயின். உடம்பில் அங்கங்கே பணச்செருக்கு. சட்டென்று ஒரு மின்னல். 'டேய் லூஸ் மாமா' அந்தக் குரல் அந்த ரசமின்னும் கலவை...

வந்த கால் என்னேக் கண்டு தயங்கிற்று.

''அம்பீ, அம்பே இல்லேயா? ''

''கோவிலுக்குப் போயிருப்பா''

''சரி, சரி, அப்பறம் வறேன். வந்தா நா வந்ததாச் சொல்லு. சொல்றியா ஆ...சரி வரேன்...சர்வேஸ்வரா எல்லாரையும் காப்பாத்துடாப்பா''

அதே நடை. அதே அச்சு. என்ன வார்ப்பு...

''ஆரு மாமியா? வாங்கோ வாங்கோ...ஏதேது அத்தி பூத்தாப்பிலே. எங்களேயெல்லாம் எங்க அடியோட மறந்துட்டேளோன்னு பாத்தேன். இப்பவாவது வழி தெரிஞ்சுதே''

''வரவாண்டாம்னு இல்லேடி கொழந்தே...எல்லாத்துக்கும் நேரங் காலம் வாய்க்க வேண்டிருக்கு

ப்பாரு. இப்பத்தான் ஒழிஞ்சுது. நானும் எவ்வளவோ பிரயத்தனப் பட்டேன், முடியலே''

''நானும் இவரிட்ட அடியா ஆடிச்சுண்டேன். ஒரு தரமாவது போய்த் தலெயக் காட்டிட்டு வாங்கோன்னு...அவருக்கு அதுக்கெல்லாம் நேரமேது? ஊர்ல பெரிய மனுஷனாய்ப் போயிட்டார். நாலு பேர் நாலு இடத்துலே கூப்பிட்டுர்ரு...பாட்டு, பஜனை சங்கீதம்னு ஒண்ணு விடறதில்லே ஒரு நாளும்''

''ஏதோ, ஆண்டவன் புண்ணியத்திலே நன்னா இருந்தாச் சரிதான் கொழந்தே''

''எல்லாம் ஒங்க ஆசீர்வாதம். ஊரே எங்களைப் புரிஞ்சுக்காதப் போவேயே நீங்க புரிஞ்சுண்டவர். ஒங்க ஆசீர்வாதம் இல்லேன்னா இன்னிக்கி இப்பிடி கண்ணுக்கு நெறவா சீரும் செனத்தியுமா இருக்க முடியுமா?''

''எல்லாம் அந்த அம்பா அனுக்கிரகம். எங்கிட்ட என்ன இருக்கு?''

''பெரிய மனசு ஒங்களுக்கு அப்பிடிச் சொல்றேள். மாமா எப்படி இருக்கார்?'' வழக்கமான குசலப்பிரச்சனம். பேச்சு எங்கெங்கோ தாவிற்று.

''பாகவதர் என்ன சேருர் இப்போ?''

''வயசாயிடுத்தோன்னோ. முன்னப்போல பேச முடியலே. இருந்தாலும் மனுஷன் விடறதில்லே. முடியறதோ முடியலியோ கால்ல சக்ரத்தெக்கட்டிண்டு சுத்தியாரது. இப்ப பேரு இருக்கச்சவே தேடிண்டாத்தான் உண்டாம்.''

''பாவம் வயசு காலத்துலே வரப்படாதது வந்திருக்கு, யாரச் சொல்லி என்ன பண்றது. ம்ஹும். எம் பேர்ல உசுரான உசிரு அவருக்கு. சதா கொழந்தே கொழந்தேன்னு உசிர விடுவர். என்னெரெண்டு வார்த்தெ சிலாகிச்சுப் பேசலேன்னா போச்சு. மேல ஓடாது மனுஷனுக்கு'' என்று சொன்னவள் அதற்காக வெட்கப்படுவது போல நாணினாள்.

''ஏதாவது சாப்பிட்டேளா? ஆத்துலேயே இருப்பர். வந்தவாளுக்கு ஒரு பச்சைத்தண்ணி தரத் தெரியாது. எல்லாத்துக்கும் நான்தான் வந்தாகணும். நா இல்லாட்டா நிமிஷம் ஓடாது அவருக்கு. நிமிஷத்துக்கு நூறு அம்பே. நேக்கும் ஓடியாடிச் செய்யணும்னுதான். இருக்கு ரெண்டுகையும் ரெண்டுகாலுந்தானே இருக்கு, என்ன செய்ய?''

''குடுத்துவெச்சவன் கிச்சா. இல்லேன்னா ஒன்னப் போலக் கெடைக்குமா?''

''ரொம்பப் புகழறேள் நீங்க. அம்புட்டுக்குலாயக் கில்லாதவள் நான்''

---

## பௌர்ணமிக் கதிர்கள்

வானச் சுவரில்
வெள்ளை அடித்தபின்
பூமித் தொட்டியில்
புரளும் மட்டைகள்.

—ட்டி. ஆர். நடராஜன்

---

வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தாள். அவள் விட்ட விஷயங்களை எண்ணிவிடலாம். அவள் எப்போதுமே அழகு அதுவும் கையெடுத்துக் கும்பிடத் தோன்றுகின்ற அழகு ஊரே சொல்லும், 'பொண்ணுன்னா அப்படின்னா இருக்கணும்'. வீட்டிலுள்ள ஒவ்வொன்றையும் பிரியத்தோடு காட்டினாள். கோத்ரெஜ்பீரோ; பிரஷர்குக்கர்; மின்சாரஷேவர்; மின் விசிறி; மின்சார இஸ்திரிப் பெட்டி. இன்னும் மேல் தட்டு நாகரிகத்தைப் பிரதி பலிக்கிற எல்லாமே இருந்தன. அவனுடைய தாடி நினைவு வந்தது. மழிக்காத தாடியும், மழுங்காத அந்த ஷேவரும்...

''ராத்திரி இங்க சாப்டுத்தான் போணும்''

''மன்னிச்சுக்கோ கொழந்தே. சாயங்காலமே வந்துடறதா சொல்லிட்டு வந்திருக்கேன்.''

''இங்கவரதே அபூர்வம். அப்பவும் டயத் தெமடியலயா கட்டிண்டு வறது?''

''இல்லே கொழந்தே''

''அப்பறம் ஒங்க இஷ்டம்'' கொஞ்சநேரம் பேச்சு. எல்லாம் அவனைப்பற்றி அவனுடைய அன்பைப்பற்றி. ஒவ்வொன்றிலும் இழைந்து இழைந்து பேசினாள். பூப்பாவுகிறுற்போல் அப்படியொரு பேச்சு. அப்படியொரு நறுக்குத் தெரிப்பு. எல்லாவற்றிலுமே அவள் அவள்தான். கிச்சா அதிருஷ்டக்காரன்.

''நமஸ்காரம் பண்றேன் மாமி'' சொர்ணவிக்ரகமாய் என்காலில் விழுந்தாள். அவளைத் தொட்டுத் தூக்கி நிறுத்திய போது எனக்குள் சிலிர்த்துக் கொண்டு ஓடிற்று.

''ஒரு கொறையுமில்லாமெ நன்னா இருக்கணும்டியம்மா கொழந்தே. தழயத் தழயத் தாலியத் தொங்க விட்டுண்டு பதினாறும் பெத்துண்டு பெருவாழ்வு வாழணும்.'' இலேசாகச் சிரித்துக் கொண்டே கடைக்கண்ணால் அவனைப் பார்த்தாள். அவன் முகத்தைப் பட்டென்று திருப்பிக் கொண்டான்.

''தோவரேன்''—உள்ளே ஓடினாள். கையில் ஒரு பிளாஸ்டிக் பையுடன் ஓடி வந்தாள்.

''என்னடி கொழந்தே இதெல்லாம்?''

''பெரிசா ஒண்ணுமில்லே, என்னவோ ஏழைக்கு ஏத்த எள்ளுருண்டே. மாமாக்குப் புடிக்குமேன்னு ரெண்டு வறுத்த முந்திரிப் பருப்பு வெச்சிருக்கேன். ஒண்ணும் பண்ணாது. அசல் நெய்லே வறுத்தது'' வாங்கிய கை தாழ்ந்தது. இடிகனம். அது ரெண்டாம் அவளுக்கு.

''வரேண்டி கொழந்தே...ஒடம்பெ ஜாக்ரதையாப் பார்த்துக்கோ. அதான் முக்யம். வரேன்'' அவன் என்னைத் தீர்க்கமாகப் பார்த்தான். பிறகு தலையைக் குனிந்து கொண்டான்.

''நீலுவைப் பாத்தேளோ?'' என்னிடம் கேட்டாள்.

''நீலுவா ஆரு?''

''ஆரா...? எங்களோட மூத்தபெண். அவதானே நீலு...சனியன் எங்கயாவது வெளையாடப் போயிருக்கும். இவன்தான் கடைசி. ராஜேஷ்னு பேரு, நடுப் பயலைத்தான் பாத்தேளே 1வது படிக்கிறான். நீலூவா ஏட்டி நீலு...எங்போச்சு இந்தப் பொண் நீலூவ்...''

(15-ம் பக்கம் பார்க்க)

# ஞானக்கூத்தனும் காமராசனும்

கோ. ராஜாராம்

வரண்டிருக்கும் விமரிசனத்துறையில், இன்று, அங்கும் இங்கும் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் ஓரிரு சிறு சலனங்களே எழுச்சிகள் என்று கொண்டாடப்படுகிற வேளையில், ஞானக்கூத்தன் தான் வழக்கமாக எழுதும் கவிதைகளை ஒதுக்கிவிட்டு, விமரிசகனாகப் பேனாவை உதறியிருக்கிறார் என்பது, ஒரு மகிழ்ச்சிக்குரிய, வரவேற்கத்தக்க விஷயம்தான். அதுவும், கவிதையின் மீதான விமரிசனம், ஒரு கவிஞரிடமிருந்து கிடைக்கிறது என்றால் சாதாரணமாக உதிர்க்கப்படுகிற அபிப்பிராயங்களைக் காட்டிலும் கம்பீரமான சிலவற்றை எதிர்பார்ப்பது கடமை.

இலக்கிய விமரிசனத்திலிருந்து நழுவிப்போய், இலக்கியத்தைத் தம் சௌகரியத்துக்காக மலிவுப்படுத்தும் சக்திகளின் மேல் துப்பப்படும் எச்சிலின் வெறுப்பை எழுத்தில் வடிக்கத் தொடங்கி, காமராசனின் பலவீனமான கவிதைகள் மூன்றை உதாரணித்து, விலக்கி, விமரிசித்துவிட்ட திருப்தியுடன், முன் சிந்தனையின்றி உதிர்க்கப்பட்ட வார்த்தைகளில் கடந்து, காமராசனுக்கு, சோஷலிசம் பற்றியோ, கவிதை பற்றியோ ஒன்றுந் தெரியாது என்கிற முத்தாய்ப்புக்கு வருகிறார் ஞானக்கூத்தன். அது எந்த அளவுக்கு சரி என்பது கேள்வி.

இலக்கியத்தை வெறும் வார்த்தைக் குப்பைகளாய் ஆக்கி, அவற்றின் வலுவிலே ஒரு கும்பலைத் திரட்டிக் கொண்டுவிட்ட சில மலிவுகளின்மீது எனக்குக்கூட ஓர் எதிர்ப்புணர்ச்சியும் போர்க் குணமும் உண்டுதான். நவீன இலக்கியத்துடன் சம்பந்தப்படாத நபர்களை, அவர்களின் புகழுக்காகவும், புகழுரைக்காகவும் கொண்டுவந்து மேடையில் அமர்த்திக்கொண்டு, கவிஞன் தன்னை வெளிப்படுத்திக் கொண்டு, அவர்களுடைய நிழலில் முடங்கி மிளிர வேண்டிய தாழ்ச்சி நிலையைப் பற்றிய அருவருப்பு மிகுந்த அளவு எனக்கிருக்கிறது. 'நீங்கள் என்னைக் கம்யூனிஸ்ட் ஆக்கினீர்கள்' என்று குரலெழுப்பி, 'செங்கொடியை அணைத்தபடி' நடந்த கவிஞர், ஒரு சாதாரண அரசியல் வாதியைப் போல, சந்தர்ப்ப வாதத்திற்கு நழுவி, ஒருவித சமரச முயற்சியை மேற்கொண்டு, 'நீங்கள் என்னைச் சோஷலிஸ்ட் ஆக்கினீர்கள்' என்று வடிந்து போகிற நிலை, அவர்மேல் கொண்டிருந்த நன்மதிப்பை மறு பரிசீலனை செய்யும் அளவுக்கு என்னைப் பாதித்துள்ளது. அவரின் இச் செயலை நான் 'துரோகம்' என்றுகூட சொல்லத் துணிவேன்.

ஆனாலும், இவையெல்லாம் என் விமரிசனத்தை எந்த அளவுக்குப் பாதிக்க வேண்டும் என்று ஒரு வரையறை இருக்கிறதல்லவா? அவருடைய கவிப் பயணத்தின் முக்கிய ஓடைக்கு அப்பாற்பட்ட, அல்லது அவருடைய கவிதைகளில் இனிமேல் வெளிப்படக் கூடிய (வெளிப்படத் தொடங்கிவிட்ட) விஷயங்களாய் இருக்கிற இவற்றை அடிப்படைகளாய்க் கொண்டு விமரிசனம் செய்ய முற்படுவது எந்த விதத்திலும் பொருந்தாது.

சரியான முற்போக்குத் திசையில் காலடி எடுத்து வைத்திருந்த நிலையில், திசை தவறிச் சென்று கொண்டுள்ள ஒரு கவிஞரின் இறந்தகாலக் கவிதைகள் இவை. காமராசன் எல்லாவற்றிற்குமே ஒரு பிம்ப (image) மூலம் பூசித்தான் பார்க்கிறார். இயற்கையும், சமூகமும், நேரிற் காணும் சிறு காட்சிகளும், மனக் கனவுகளில் உருவெடுக்கும் நிகழ்ச்சிக் கவிதைகளும், யதார்த்தம்கூட—அவருடைய கவிதைகளில் பிம்பங்களின் சூழலைச் சார்ந்துதான் வெளிப்படுகின்றன. பல கவிதைகளில் இந்த பிம்பக் கிளைச் சரடு, பொருத்தமான சொல்லாட்சிகளைப் பெற்று, மிக இயல்பாய்ப் பிரிகிறது. மிகச் சில கவிதைகளிலும், வசன கவிதைகளிலும், வெளிப்பாட்டையே தடை செய்து முடிச்சுகளை உருவாக்கி, தெளிவின்மையையும், சலிப்பையும் (Monotony) தரும் அளவுக்கு அடர்ந்து விடுகின்றது. இந்தப் பலவீனக் கவிதைகளை விடுத்து, பெரும்பாலான கவிதைகளில் வலுவான கவித்துவம் தெரிகிறது. அதைக் காண ஞானக்கூத்தனின் குதிரைப் பட்டைப் பார்வை இடந்தரவில்லை. முதல் பாராவின் கடைசியிலேயே இதற்கு நிருபணம் பார்க்கலாம்.

'எழுத்தி'ல் காமராசன் கவிதை வெளிவந்திருப்பதை மிகக் குதூகலத்துடன் குறிப்பிடுகிறார். இந்த நூல்களைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டதன் காரணமே, 'எழுத்தி'ல் இவர் கவிதை வந்திருக்கிறதே என்கிற இரக்க மனப்பான்மையோ என்னவோ? 'எழுத்து'தான் எல்லாவற்றிற்கும் எல்லை. [இப்போது 'கசடதபற'வா?] 'எழுத்தி'ல் கவிதை வந்திருக்கிற செய்தியைக் குறிப்பிட வேண்டிய அளவிற்கு 'எழுத்தி'ன் தரம் உயர்வு; அதாவது, 'தாமரை' 'கடிதம்' போன்றவை யாவும் தாழ்ச்சி. விமரிசனத்திற்கு மிகச் சிறந்த அடிப்படைக் கோட்பாடு!

பாரதிதாசன் மரபின் சாதி, இனம் கொள்கைகளின் காரணமாக, உருவம், உள்ளடக்கம் ஆகியவற்றில் கவிதைக்கு நேர்ந்த இழப்பு, பாரதிதாசனின் கவி வாழ்வின் பிற்பகுதியில் நிகழ்ந்த, முக்கியமல்லாத ஒரு விஷயம். அப்படி இழப்பதற்கு முன் பாரதிதாசனின் ஆளுமையின் வலுவைக் காண்பதற்கு 'பாரதிதாசன் கவிதைகள்' — முதற் தொகுதி, 'அழகின் சிரிப்பு' போன்ற நூல்கள் துணை செய்கின்றன. பாரதிதாசனின் சாதி, இனம், பற்றிய கொள்கைகள், ஒரு கால கட்டத்தின் அத்தியாவசியத் தேவை. அவற்றின் இன்றைய பொருத்தமின்மையைச் சுட்டிக் காட்டுவதன்மூலம் பாரதிதாசன் கவிதைகள் எல்லாம் நீர்த்துப் போய்விட்டன என்று நிருபித்ததாகாது.

'சூரியகாந்தி' தொகுப்பில் காமராசன் ஓரிரு தொடக்க காலக் கவிதைகளில் பாரதிதாசன் மரபைப் பின் பற்றியிருப்பது உண்மைதான். ஆனால், வளர வளர, காமராசனுக்கு ஒரு தனிப் பாணி அமைந்து விடுகின்றது. ஆனால் ஞானக்கூத்தன் 'பாரதிதாசன் மர'பில் வெகு சுலபமாக அவரை அடைத்துவிட்டு, சவலை மரபு, ஹம்பக் என்றெல்லாம் பேசுகிறார். எந்த

அளவுக்கு ஒரு இளங் கவிஞன் அழங் கவிஞர்களிடம் கடன்பட்டவனே அதே அளவுக்குத்தான் பாரதிதாச னிடம் காமராசன் தீட்சை பெற்றவர். காமராசன் ஒரு தனி விளக்கு. 'கறுப்பு மலர்கள்', 'நீங்கள் என்னைச் சோஷலிஸ்ட் ஆக்கினீர்கள்', 'ஓ... நானும் அந்த ஹிப்பிகளோடு', 'முல்லை நதிக்கரை வயல்களுடன் ஒரு மறு விவாதம்', 'என்னுடைய கனவு பூமியில்', 'நாம் வானத்திற்குக் கீழே வாழ்கிறோம்', 'அடி நாளின் வசந்தங்கள்', 'கல்லறைத் 'தொட்டில்', 'செம்மண்', 'ரத்த புஷ்பங்கள்', 'கறுத்தம்மா', 'நடைப் பிணங்கள்' —இப்படி சிறந்த கவிதைகளின் எண்ணிக்கையை நான் கூற முயன்றால், வெகுவாக நீளும். ஆனால் தேவையில்லை. இவற்றின் தலைப்புகளேகூடப் போது மானவை—இவை பாரதிதாசனின்—அல்லது வேறு எவரின்—மரபுக்கும் இயைந்தவை யல்ல. அவை தனிப் பட்ட பாணியில் இயன்றவை. இதெல்லாம்கூட வேண்டாம்—'ஒரு சேரிக் கிராமமும், தபால்காரனின் மரணமும்' என்ற கவிதையைப் படித்துப் பார்க்கட்டும். எந்த அளவுக்கு அதில், ஒரு மிகச் சிறந்த நாட்டுப் பாடலின் ஒலிநயமும், கவிநயமும், எளிமையும், இயல்பும் அமைந்துள்ளன என்று தெரியும்.

மாசிப் பிறையடிக்கும்
　　ராத்திரிகள் சொல்ல வேணும்
மசங்கலிலே விளையாடும்
　　மழைமேகம் சொல்ல வேணும்
எழுத்துச் சுமைக்காரர்
　　எங்க ஊரு தபால்காரர்
எழுத்து மங்கும் சாயங்காலம்
　　எமனோடு போன தென்ன?

தரை அழுகும் பறைச்சேரித்
　　தரை மெழுக வந்ததுரை
தரைக்குள்ளே போனதென்ன
　　தனித் தூக்கம் ஆனதென்ன?
நீண்டசையும் மருதாணி
　　நிழல் எழுதும் எழுத்தாணி
எழுத்தாணி சாய்ந்த பின்னால்
　　எங்கும் வெயில் வெள்ளெழுத்து.

தம்பிடிகள் சேர்த்துத்
　　தங்கரூபா உண்டு பண்ணி
முழுநிலவில் கடைசேந்தோம்
　　முழுரூபா செல்லலியே!
தாளென்றும் கிடுகென்றும்
　　தலைச் சுமைகள் கொண்டுவந்தும்
கூரை நிலைக்கலியே,
　　சாரலுக்குப் பொறுக்கலியே!

ஊர்க்கோடிச் சாவடியில்
　　ஒளி விளக்கு எரிஞ்சாலும்
விழிவிளக்கு எரியலியே.
　　வியாசர் கதை முடியலியே
கடுதாசி கொடுத்தவுக
　　கைவீசிப் போனதென்ன!
காலன் எமராஜன்
　　கைநாட்டுப் பேர்வழியோ?
மசானத்துத் தீகூட
　　தபால்பெட்டி நிறமிருக்கும்
ஜன்னங்களெல்லாம் கடுதாசி
　　ஜனன மரணம் தபால்காரர்.

இது போன்ற கவிதைகளைப் படித்துவிட்டு, ஒரு சாதாரணன் கூட பாரதிதாசன் மரபினது என்று துணியமாட்டான். ஆனால் ஞானக்கூத்தன் அறிவீ னம், தெளிவின்மை என்றெல்லாம் சாதிக்கிறார். அவர் அகராதியில் சோகத்துக்கும், சோஷலிசத்துக்கும் வேறு அர்த்தங்கள் இருப்பதுபோல, அறிவுக்கும் தெளிவுக்கும்கூட ஏதும் தனிப்பட்ட அர்த்தம் இருக்கும் போலிருக்கிறது. ஞானக்கூத்தன் அந்த அர்த்தங் களைத் தெரிவித்துவிடவேண்டும். என்னைப் போன்ற ரசிகர்களுக்கு மிகுந்த உதவியாயிருக்கும்.

மேற்சொன்ன பாடலின் நாட்டுப் பாடல் தன்மை யின் உக்கிரமும், சோகமும், 'காலன் எமராஜன் கைநாட்டுப் பேர்வழியோ?' என்பதில் வெளிப்படும் நகைச்சுவை இழைந்த சோகமும் பாரதிதாசன் பாடல் களில் எங்கும் வெளிப்பட்டிருப்பதாக எனக்குத் தெரியவில்லை. இதற்குச் சமமான நாட்டுப் பாடல் தன்மையும், சோகமும் வெளிப்படும் கவிதையொன்று ஞானக்கூத்தனுடையது, என் நினைவிற்கு வருகிறது. பெயர்: தேரோட்டம். 'கசடதபற'—5ல் வெளியா னது. அதில் ஒரு பகுதி:

"தெரு ஓடும் தூரமின்னும்
　　வடமோடிப் போகலியே
வடம் போன தூரமின்னும்
　　தேரோடிப் போகலியே

காலேயும் அந்தியிலே
　　கண்தோற்றம் மாறையிலே
ஆரோ வடம் புடிச்சி
　　அய்யன் தேரு நின்னுடுச்சி."

தபால்காரர் மரணமும், தேர் நிற்றலும், ஒரே மாதிரி. கிராம மக்களால் உணரப்படும் சோக உணர்ச்சிகள். இரண்டும் இயல்பானவை. ஞானக் கூத்தன் 'தேரோட்ட'த்தை எழுதி 'கசடதபற'வில் பிரசுரித்து மகிழ்வார். ஆனால் காமராசனை சுவலை மரபின் கவிஞர் என்று மண்ணை வாரியிறைப்பார். விமரிசகர் ஞானக்கூத்தன் காமராசனை அடையாளங் கண்டுகொள்ள முடியவில்லை என்பதைக் காட்டிலும், சக கவிஞரை உணர்ந்து கொள்ள ஞானக்கூத்தன் தவறிவிடுகிறாரே என்கிற வருத்தம் எனக்கு மிகுதி.

காமராசனிடம் சமஸ்கிருதத்தின்மீது ஒரு இறுக்கமான பற்று இருக்கிறது. அதன் காரணமாக அவருடைய கவிதைகளின் தமிழ் ஒரு புதிய பாஷை யாக, ஒரு புதிய நடையும், துரிதமும் கொண்டு பரிண மிக்கிறது. சாதாரணமாக சமஸ்கிருதமும், தமிழும் கலந்தால் மணிப்ரவாளந்தான் தோன்றும் என்கிற வாதத்திற்கு, காமராசனின் கவிதைகள் யாவும் அறை கூவல்கள். தமிழின் இனிமை முழுமை பெறுவதே அவர் சமஸ்கிருத வார்த்தைகளை மிகுந்த திளைப்புடன் பயன்படுத்துவதுதான். காமராசன் இச் செயலின் மூலம் தமிழ்க் கவிதை இலக்கியத்திற்குப் புதியதொரு பரிமாணத்தையே அளித்திருக்கிறார். இதுகூட விமரி சகர் ஞானக்கூத்தனால் உணர முடியவில்லை.

பாரதியார், மடத்திலும் ஸ்தலபுராணங்களிலும் அடைபட்டிருந்த கவிதையை விடுதலைசெய்து சுதந்திர வேட்கையின் வெளிப்பாடாய்ச் சமகாலத்த தாய்க் கவி தையை ஆக்கியதன் மூலம் எப்படி ஒரு புதிய பரிமா ணத்தைத் தமிழுக்கு அளித்தாரோ, பாரதிதாசன் சமூகச் சீர்திருத்தத்திற்கும், காதலின் உணர்ச்சி களுக்கும் முக்கியத்துவம் அளித்ததன் மூலம் எப்படி

ஒரு புதிய பரிமாணத்தை அறிமுகப்படுத்தினரோ, ஞானக்கூத்தன் இன்று தன் கவிதைகளில், கவிதையின் சந்த ஒலியமைப்பைப் புறக்கணிக்காமல் அதே சமயம் புதிய விஷயங்களை, புதிய பாணியில் கற்பனைப் போர்வைகளை உதறிவிட்டு யதார்த்தச் சித்தரிப்பை மேற்கொண்டதன் மூலம் எப்படி புதிய பரிமாணமொன்றை அளித்துக் கொண்டிருக்கிருரோ, அதே போல்தான் காமராசனும் தன் கவிதை முயற்சிகளில் மலர்ந்தெழும்பி, ஆளுமையொன்றை ஏற்படுத்திக் கொண்டிருக்கிருர். இவ்வாறு, ஒவ்வொருவரும் ஒரு தனிப்பட்ட தன்மைகளின் சிறப்புடன் விளங்கிக் காணும்போதுதான் ஒவ்வொருவரும் இலக்கிய ஆளுமைகளாய் மதிக்கப்படுகிருர்கள்.

ஞானக்கூத்தனுக்கு பாரதிதாசன் மரபின்மேல் தாளாத கோபம். அந்தக் கோபத்தை வெளிப்படுத்திக்கொள்ள, காமராசனை விமரிசிக்கும் நேரந்தான் கிடைத்திருக்கிறது என்பது அவர் துர்ப்பாக்கியம் - சூழப்பம். காமராசனை பாரதிதாசன் மரபினராய்க் கற்பனை செய்து கொண்ட முதல் தவறின் தொடர்ச்சிகளாய், ஒவ்வொரு வாதமும் அடுக்கப்படுகிறது. இந்த நிழல் யுத்தம் விமரிசகர் ஞானக்கூத்தனைத் தலை கவிழ்ந்து விழச் செய்திருக்கிறது. ஞானக்கூத்தன் உதாரணிக்கும் கவிதைகள், ஒரு உயிருள்ள கவித்துவ ஆளுமைக்கு எந்த விதத்திலும் நியாயம் செய்வதாய்த் தெரியவில்லை. கவிதைத் தொகுதியை அடிப்படையில் எப்படி அணுகி விமரிசனம் செய்வது என்றுகூடத் தெரியவில்லையே ஞானக்கூத்தனுக்கு. வேண்டுமானல் 'மூன்று கவிதைகளின் விமரிசனம்' என்று தலைப்புப் போட்டுக் கொள்ளட்டும். இரண்டு முழுப் புத்தகங்களிலிருந்து மூன்று கவிதைகளை எடுத்துக் கொள்ளும்போது, ஞானக்கூத்தன் அக்கவிதைகளைப் பிரதிநிதிக் கவிதைகளாய்க் காண்கிருர் என்று அர்த்தம். அந்தக் கவிதைகள்தான் அத்தனை கவிதைகளிலிருந்து உதாரணிக்கத் தக்கவையென்று அர்த்தம் இந்த பொறுக்கப்பட்ட கவிதைகளில் காமராசனின் திறமையெல்லாம் மலர்ந்து மணம் வீசுகிறது என்று அர்த்தம். ஆனல் இந்த விஸ்தாரமான சிந்தனையெல்லாம் ஞானக்கூத்தனுக்கு இல்லை. பாரதிதாசன் மரபை ஒரு 'பிடி' பிடிக்க வேண்டும். கையில் கிடைத்திருக்கின்றன சில கவிதைகள். அதில் ஏதோ நமக்குச் சௌகரியமாய் இருக்கிற கவிதைகளைப் பொறுக்கியெடுத்து விமரிசிப்போம். இது ஒரு வகையான 'ப்ளாக்மெயில்'. இந்த வகையான 'ப்ளாக்மெயில்' நம் இலக்கிய உலகில் வெகு காலமாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அதில் ஒன்ருய்ச் சேர்ந்துவிடவா 'கசடதபற' விமரிசனமொன்றைப் பிரசுரிக்க வேண்டும்?

கவிஞன் உணர்ச்சியும், உணர்ச்சிக்கு இயைந்த சொற்களும், இதயத்திலிருந்து புறப்படும் தாபமும் மட்டும் கொண்டு விட்டால் சொற்கள் என்ற மீடியத்தை வைத்துக் கொண்டு என்னவெல்லாம் சாதிக்க முடியும் என்பதற்கு இத்தொகுப்புகள் உதாரணங்கள். 'அடிநாளின் வசந்தங்கள்' என்ருெரு கவிதை.

''அடிநாளின் மனக் கனவு வசந்தங்கள்
அதோ அந்தப் பாலைகளில் மலர்கிறது.
விடியாத துருவ இருள் சிரிக்கிறது
வியத்நாமின் ரத்த நதி வெளுக்கிறது.
.................................

## எனக்கென்ன குறை?

எத்தனையோ கற்களை
என் காலிடறிற்று
ஒன்றிலேனும் அகலிகை அகப்படவில்லை.
என்பெயரும் இராமன் தான்!

—ஆர். வி. எஸ். மணியன்

---

அன்ருெருநாள் மகிழமரச் சன்னதியில்
ஆயிரமாய்ப் பூமலரும் மண்ருதுவில்
ஆத்மாவின் வசந்தங்கள் தேடியே

ஆக்கினைகள் செய்திறந்த தோழரே
அதே வசந்தம் வந்ததே—எம்
விழிநீர் மலர் சிந்தவே.''

கனவுகள் நனவாகும் எதிர்பார்ப்பின் வேளையின் மகிழ்ச்சியையும், மன அடைப்பையும், இதைவிடப் பூரணமாய் யாராலும் சொல்லிவிட முடியாது.

''சரித்திரத் தாய் விழி நீரின் கடல்வெளியில்
சமர் வளர்த்த உயிர்த்துடுப்பின் படகுகளே''

என்று தம் தோழர்களை விளிக்கும் கவிஞனின் உள்ளம் அடுத்த நிமிஷம் அளிக்கின்ற நம்பிக்கை:

''ஆத்மாவின் ராகங்கள் பாடியே
அலைமடியின் கல்லறையில் தூங்கினீர்
அதே கடற்கரை வந்ததே—எம்
விழிநீர் மலர் சிந்தவே.''

இப்படி, சொற்களின் மலர்களைத் தன் உணர்ச்சிகளால் அர்சிக்கும் ஒரு கவிஞனைத்தான் ஞானக்கூத்தன் தூற்றுகிருர். ''நீங்களெல்லாம் போராட அழைத்தீர்கள்'' என்று காமராசன் ஓரிடத்தில் குறிப்பிடுகிருர். அவ்வகையிலான ஒரு இலகக்கிய, தத்துவப் போராட்டந்தான் இந்த என் கட்டுரை. 'கவிதைக் கலையைப் பற்றிக் காமராசனுக்கு என்ன தெரியும்?' என்று புருவம் உயர்த்து முன்னர், ஞானக்கூத்தன் தனக்குத் தெரிந்ததைக் கூறிவிட்டால் சௌகரியமாய் இருக்கும்.

இன்னும் விஸ்தாரமாய் காமராசனை விமரிசனம் செய்யலாம். அதை ஞானக்கூத்தனின் விமரிசன சாந்நித்தியத்தில் பண்ணமுடியாது. இன்னென்று: 'கசடதபற'விலேயேகூட காமராசன் பாணியிலான கவிதைகள் வெளிவந்துள்ளன. 'சட்'டென்று நினைவுக்கு வருகிற ஒரு பெயர்: தி.க. கலாப்ரியா. எனவே, எதையும் சொல்லிவிடுவதற்கு முன்னல், பிரசுரிப்பதற்கு முன்னல் தீர்க்க யோசியுங்கள் என்றுதான் சொல்ல விரும்புகிறேன்.

தமிழ் இலக்கியத்தில் இன்னும் சாதிக்க வேண்டியவை, அறிமுகப்படுத்தப்பட வேண்டியவை எவ்வளவோ இருக்கையில், இந்த வாத எதிர் வாதங்களிலேயே நாட்களும், தாள்களும் கழிந்து கொண்டிருக்கின்றன என்கிற ஆழ்ந்த வேதனையினல், இப்படிப்பட்ட சர்ச்சைகளிலிருந்து நான் ஒதுங்கி நின்றிருக்கிறேன். ஆனல், பொறுப்புள்ள ஒரு கவிஞர் பொறுப்புள்ள ஒரு பத்திரிகையில், பொறுப்பில்லாத ஒரு செயலைச் செய்திருக்கையில் என்னல் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை.

# சாலையின் எதிர்ப்புறங்களில் சன்னல்கள்

தீபப்ரகாசன்

சுப்புணி பால்கனியில் நின்று கொண்டிருந்தான். பம்பாயில் கூட, காலை இவ்வளவு அழகாக மலர முடியுமா? பனி இன்னும் விலகவில்லை. சிகரெட் புகையில் இளைஞன் சிரிப்பதுபோல பனி, புகைநடுவே சயான் சூரிய எழிலில் மலர்ந்து கொண்டிருக்கிறது. சயான் வட்டத்துக்கப்பாலும் இப்பாலும் சாலை 'இ' போல வளைகிறது. சாலையின் அகண்ட பகுதியில் இந்த விடுதி. எதிரே வரிசையான கட்டங்கள். எல்லாவற்றிலும் தரைப் பகுதி கடைகள். மேலே, மேலே, மேலே, வீடுகள். ஒரு தடுப்பு, ஒரு சன்னல். ஒரு திரை ஆடுகிறது.

ஹிங்கோரானி கீழே சாலையைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கீழே என்றால் கீழே, கீழே. இன்னும் கீழே அதற்கும் கீழே போகவேண்டும். கடவுளே, மேலே ஏறமுடியாதா? அவளுடைய குர்த்தா இறுகியது.

சுப்புணிக்குப் பனி விலகியது. பால்கனிச் சன்னலைப் பிடித்தபடி பார்த்தபோதுதான் அவனுக்கு, தினமும் தாதர்வரை பஸ்ஸில் வருகிற பெண்களின் முகங்களும் அவற்றில் இந்த முகம் தனியாகவும் நினைவுக்கு வரத் தொடங்கின. உள்ளே அறையிலிருந்து கோபு கூப்பிட்டான். "மணிஏழு. பல் தேய்க்கலையா?".

அவளுக்கு இன்னொருநாள் பளுவைச் சுமக்க வேண்டும். மறுபடி ரொட்டிக்கு மாவு. முகத்துக்கு மாவு. மானேஜருக்குச் சிரிப்பு. வழிகிற பஸ்ஸில் இடம் பிடிக்க, கண்டக்டருக்கு ஒரு சிரிப்பு. மலர்ந்த முகமே வாழ்க்கையின் இன்பம். அவள் முகத்தை எப்போதுமே மலர்த்தியபடியேதானே வைத்திருக்கிறாள்?

சுப்புணிக்குச் சுமை எதுவும் இருந்ததாகச் சொல்ல முடியாது. அவன் பத்திரிகைகளுக்குத் கவிதை எழுதுவது பணத்துக்காக அன்று. கவிதை ஆவேசம் வருவதாலும் எழுதுவதில்லை—அவனுக்குக் கல்யாணம் ஆகாதது அவனுக்குத்தங்கைகள் இருப்பதால்—கல்யாணத்துக்கு என்க முடியாது. தகப்பனார் கடனில்லாமல் கல்லிடைக் குறிச்சியில் இருக்கிறார். "வாழ்க்கையில் எல்லாமே ஒரு அனுபவந்தானே ஸார்" என்பான். இவன் வீட்டுக்கு நேரே ரூட் நெ. 341 வந்து நின்றது. அந்தச் சத்தத்தில் கோபு உள்ளேயிருந்து மறுபடி கூப்பிட்டது காது கேட்கவில்லை.

அவளுக்கு ஒரே ஒரு ஆறுதல்—ரசனை என்ன? இதோ இந்தப் புகைகளுக்கு மத்தியில், இந்தப் பெரிய ராட்சகப் பட்டணம் முழுவதையும் பொன்னாக்கிக் கொண்டிருக்கிற சூரியன இன்னொரு நாளை வெட்டி வீழ்த்துவதைப் பார்த்துக் கொண்டிருப்பதுதான். எல்லாரும் அவளைப் பார்த்த வெம்மையிலிருந்து இந்த சூரியனின் வெம்மை ஆரோக்யத்தில் வேறுபட்டிருந்தது. அவளுடைய ஆபீசில், மாலைக் கல்லூரியில், ரயிலில், பஸ்ஸில் பார்க்கிற பார்வைகளிலிருந்து இவனுடைய பார்வை வேறுமாதிரி இருந்தது. ஆழமான கண்களை இன்னும் ஆழமாக்கிக் காட்டுகிற கண்ணாடியோடு, குள்ளத்தை இன்னும் குள்ளமாக்கிக் காட்டுகிற டையோடு இந்தக் கவர்ச்சியில்லாதவன் உட்கார்ந்திருந்த ஸீட்டுக்கருகே, பஸ்ஸின் குலுக்கல்களில் தனது உடம்பு அதிர்ச்சிகளால் வெதுவெதுப்புக் கொண்டிருக்கும் பார்வைகளைத் தவிர்த்தபடி அவள் வெளியே நோக்கிக் கொண்டிருந்தபோது, "ப்ளீஸ் ஸிட்டௌன்" என்று அவன் இடம் கொடுத்தான். ஒருவேளை அடுத்த ஸ்டாப்பில் இறங்குவானோ என நினைத்தாள். இல்லை. அவள் தாதரில் இறங்கிய பிறகும் அவன் இறங்கவில்லை. மறுநாளும் இது நடந்தது. மூன்றாம் நாளும். நான்காம் நாள் அவள் கேட்டு அவன் சொன்னான்—அவன் சர்ச் கேட்டுக்குப் போகிறான்! அவளுக்கு உட்கார இடம் கொடுத்துவிட்டு, தான் நின்று கொண்டே போகிறான். அவளை "உட்கார்" என்பது தவிர வேறு எதுவும் பேசாமலிருக்கிறான். பெரிய பெரிய புஸ்தகங்கள். நின்று கொண்டே படிக்கிறான். அவன் கண்கள் அவனுடைய முகத்திலிருந்து மூன்று மைல்கள் உள்ளே தள்ளி இருக்கின்றன. சிரங்குக்கு வாஸ்லேன் தடவுவதுபோல் பார்க்கின்றன. இவனுக்கு "வெதுவெது"க்கத் தெரியாதா? வாத்வானிப் பயலின் தொல்லைக்கு, முற்றுகைக்கு இவன்—இந்தக் கண்கள்—புஸ்தகங்கள் ஏதாவது பதில் சொல்ல முடியுமா? இன்றைக்கு பஸ்ஸில் பேசிவிடலாமே. எத்தனை பேர் இப்போது அவளது மார்புவரைக்குமே வருகிற அவனை அவளது பாய்ஃபிரண்டாக்கி இந்தியில் பேசவில்லை? இந்திதெரியாததும் அவனுக்கு நல்லதுதான். உள்ளே கட்டில் முனகுகிறது. நேற்று இரவு வாத்வானி வந்து அம்மாவிடம் சண்டை போட்டான்: கல்யாணம் வேணுமாம். அவள் டீ போட உள்ளே போனாள்.

ஏன் அந்த முகத்தில் அப்படி ஒரு சோகம் இருக்கிறது என்று அவன் யோசித்தான். டிக்கன்ஸின் மிஸ் ஹாவிஷாம் போல. பஸ்ஸில் அவளைப் பார்ப்பதற்கு முன்பே பல முறைகள் மார்க்கட்டில், பனை சவாடி வேங்கடேஷ் மந்திரில், ரயில்வே ஸ்டேஷனில் பார்த்திருக்கிறான். "ஏண்டா கோபு, இந்தக் குழந்தையைப் பார்த்தால் ரொம்பப் பரிதாபமா இல்லை?" கோபு, "பம்பாயில் எந்தப் பெண்ணையும் பார்த்துப் பரிதாபப்படாதே உனக்குக் கல்யாணமாகிறவரை. இல்லாவிட்டால் உன்னைப் பார்த்துப் பரிதாபப்பட வேண்டியிருக்கும்—படவும் ஆளும் இருக்காது' என்றான். கோபுவுக்கு ஸிச்சுவேஷன்களே தெரியாது. சாப்பாடு, சம்பளம், டெரிலீன்பேன்ட், ஜேம்ஸ்பாண்ட் ஸினிமா என்று அவனது வாழ்க்கையின் நாலு எல்லைகள் விரிவடைந்திருந்தன. அவனுடைய அசைவுகள் இந்த எல்லைக்குள் இருக்கின்றன. இந்த எல்லைகள் விரிந்துகொண்டே போகின்றன, தண்ணீரில் கல்லைப் போட்டால் நீர்வட்டம் விரிவது போல. அவன் அவளுக்குப் பஸ்ஸில் இடம் கொடுத்த

தைச் சொன்னபோது, "இந்த ஷிவல்ரி, டீசன்ஸி எல்லாம் மெட்ராசிலே எடுபடும். இங்கே உன்னைப் பாத்து நாலு பேர் சிரிப்பன். ஆணுக்குப் பொண் சமமானா அவாளும் நிக்கட்டுமே பஸ்ஸிலே!" என்றான். சே, மடையன் கொஞ்சம்கூட இங்கிதம், இதம் தெரியாதவன். பிற்பாடு தினமும் பஸ்ஸில் இடம் கொடுப்பதை இவன் சொல்லச் சொல்ல அவன் சிரிப்பு அதிகமானது. எதுவும் பேசிக் கொள்வதில்லை என்று தெரிந்தபோது சிரிப்பு சத்தமானது. "காணாமலே காதல்ங்கர மாதிரி பேசாமலே காதலா?" என்றான் கோபு. சுப்புணிக்கு 'திக்' கென்றது. இது காதலா? தன் கண்களின் குரலை அவள் எப்படிப் புரிந்து கொள்கிறாள். இன்றாவது நாளையாவது கேட்கவேண்டாமா? உதவி வருகிற வேளையில் நிலைமீறிவிடுவதில்லையா பலருக்கு? அவன் கைகள் இரும்புகிராதியில் இறுகின, "ஏண்டா காபிக்குப் போக வேண்டாமா?" என்று கோபு தோளைப்பிடித்த போது—

எதிர் ஜன்னலில் ஹிங்கோரானி வருவது தெரிந்தது. பின்னாடி நீள மூக்கு, முக்காடுப்போட்ட ஒரு கிழவி. 'அம்மாவோ? சிரித்தபடி ஒருவன் வந்தான். இறுகிய பேண்டில் அவன் உருகிக் கொண்டிருந்தான். கிழவி கையை ஆட்டி ஆட்டி என்னவோ சொல்லிக் கொண்டிருக்கிறாள். ஹிங்கோரானியின் உருமால் கையில் கசங்கிக் கொண்டிருந்தது. அவளது புருவங்கள் சூரியனைத் தொட முயன்று கொண்டிருந்தன. திடீரென்று அவள் கம்பி இல்லாத பால்கனிக் கண்ணாடிக் கதவைத் திறந்தாள். மேலே ஏறினாள். கிழவியும் இளைஞனும் பேபே என்றாகி, கூக்குரல் போட, கீழே, கீழே, இன்னும்கீழே, சயான்சாலையில் வாகனங்களின் உறுமல்கள் டக்கென நின்று, நிறைய வாகனங்களின் நிப்பாட்டலில் அமைதி சூழ்ந்தது.

"நான் நேத்தே பேசியிருக்கணும்" என்று முனகிக் கொண்டான் சுப்புணி தனக்குள். கோபுவுக்குப் புரிந்தது. புரியவும் இல்லை. ●

---

இரு கவிதைகள்:

## இழப்பு-('ஒட்டுப்புல்'லுக்கு ஒட்டுப்புல்)

அன்று நீ—
எனக்காகப் பிறந்தாயென்று
செத்துவிட்ட அத்தை சொல்வாள்
இன்றும் ஞாபகம் உண்டு

என்னுடன் பாண்டியாடி
தொடையிலே சூடுவாங்கி
அழுகையை நிறுத்த பாதி
எச்சிலில் ஜ்வலிக்கும் மிட்டாய்
தின்றது ஞாபகம் உண்டு

பியூஸி பாஸாகாமல்
பிள்ளையார் வேஷ்டியோடு
வாய்க்காலும் கோவிலுமாய்
வட்டமிட்ட பலவருஷம்
எனக்காக ரங்கனையும்
சக்கரத் தாழ் வாரையும் நீ
வலம் வந்த நினைவுண்டு

கல்கத்தா என்ஜினியர்
கழுகுபோல் வந்து உனை
கல்யாண இரை உண்டு
காரவிலில் பறந்ததுவும்
கசப்பாக கரிப்பாக
மறக்காமலிருப்பதுண்டு

இன்று நீ—

வாயிலே வெத்தலையும்
வயிற்றிலே பிள்ளையும்
திமிருகின்ற முலைகளிடை
திருமாங்கல்யமுமாய்
வாசல் படி நின்று
'வரது! சௌக்யமா' என்று.........

இந்த க்ஷணம் ஞாபகம்
எத்தனை நாள் உண்டு?

—ஜராதுஷ்டிரன்

## விழிப்பு

எனக்குப் பதினைந்து வயசாகி விட்டது

இனி—

அப்பாவுடன் கடைவீதி செல்ல

மனசில் கூச்சம் மருட்சித் தயக்கம்

அம்மாவுடன் கோயிலுக்கு

மாலையில் கூடச் செல்ல

மேலும் குழப்பம் மிரண்ட வெட்கம்

கடைகளில் முலைதிறந்த

நாயுடு ஹால் பொம்மைகளை

வெளீரென்று இடைதிறந்து

வருகின்ற இளசுகளை

மூன்றுக்கு பதினைந்து

முக்கோண விளம்பரத்தை

அர்ச்சனைக்கு அசைந்து வரும்

ஆறுகஜம் மாமிகளை

பார்ப்பதுதான் எப்படியோ?

பாராது இருப்பதுவோ?

—ஜராதுஷ்டிரன்

# ஜின்னின் மணம்

நீல. பத்மநாபன்

அறைக்குள் நிறைந்து நின்ற விளக்கொளியின் மஞ்சள் நிறம் மங்கிக் கொண்டே வந்தது.

புட்டியில் மீதியிருந்த ஜின்னைத் தம்ளரில் ஊற்றி ஐஸ் பெட்டியிலிருந்து ஐஸ் துகள்களை இட்டு, சோடாவும் கலந்து என் நேர் நீட்டிய இளைஞனை வெயிற்றர் ஜெயிம்ஸை உற்றுப் பார்த்துக்கொண்டே இருக்கிறேன் நான்.

வெண்மை நிறச்சட்டையும் சிவப்புக்கால்சாராயும் அவனுக்கு மிகவும் பொருத்தமாக இருந்தது.

சிகரட்டை இழுத்தவாறு தம்ளரைக் கையிலெடுத்தேன்.

'ஜெயிம்ஸ்... நீ சொல்வதைக் கேட்க எனக்கு வேடிக்கையா இருக்குது... இது எவ்வளவு பிரம்மாண்ட ஹோட்டல்... கீழே பெரிய ஹாலில் எத்தனையோ பேருங்க வயிறு புடைக்கச் சாப்பிட்டவாறு கும்மாளம் போடுருங்க... எத்தனையோ பேருங்க என்னைப் போல் இப்படித் தனியறைக்குள் தனிமையில் அடைபட்டிருந்துகொண்டு தின்னுத் தீக்கிருங்க... எல்லோருக்கும் எடுத்துக்கொண்டு வந்து விளம்பும் நீயும் உன் கூட்டாளிகளும் இங்கிருந்து ஒன்றும் சாப்பிடக்கூடாது, வெளியில் வேறெங்காவது போய்த்தான் சாப்பிடலாமுண்ணு இங்கே ஒரு விதியா? இதென்ன பைத்தியக்காரத்தனம்! நானும் எவ்வளவோ நாளாக இங்கே வந்துகிட்டிருக்கேன்... இதுவரை எனக்குத் தெரியாதே...!'

நிறுத்தாமல் அப்படியே பேசிக்கொண்டே போக வேண்டுமென்று ஒரு உந்துதல் என் அகத்தில் பீறிட்டுக் கொண்டே இருந்ததே ஆயினும், கையிலிருந்த தம்ளரில் நுரை ததும்பிக் கொண்டிருந்த பானத்தில் சங்கமிக்கச் சிறிது நிறுத்தினேன்.

'இந்தக் கண்டிஷனுக்குக் கட்டுப்படாவிட்டால்இந்த வேலையும் இல்லையே சார்...விதியை மீறினு பெனல்ட்டி உண்டு சார்...'

'அசல் கடைஞ்செடுத்தக் கஞ்சன்தான் உங்க முதலாளி.'

சற்றுக்கழிந்து நானே கேட்டேன். 'சரி...அதிருக்கட்டும். உனக்குச் சம்பளம் எவ்வளவு?'

அவன் இப்போது தடுமாறினுன். மொழு மொழு வென்று ரோஸ் நிறத்தில் கவர்ச்சியாக இருந்த அவன் முகத்தில் இப்போது ஒரு தத்தளிப்பு தெரிகிறது.

'ஜெயிம்ஸ்... இந்த ஹோட்டலில் நீ வேலைக்கு வந்து சேருவதற்கெல்லாம் எவ்வளவோ முந்தியே வந்து கொண்டிருக்கும் கஸ்டமர் நாண்ணு உனக்குத் தெரியுமில்லலே?'

'தெரியும் சார்...'

'பிறகென்ன! இங்கே நடக்கிற இதைவிட பெரிய பெரிய சங்கதிகளெல்லாம் எனக்குத் தெரியும். நான் வருமான வரி அதிகாரியோ, லேபர் ஆபீஸரோ ஒண்ணும் இல்லே... சும்மா சொல்லு.'

'சொன்னு சார் நம்ப மாட்டீங்க.'

'அதெல்லாம் நம்புவேன்... சொல்லு கேட்போம்.'

'மாசம் வெறும் அம்பது ரூபாதான் சார் சம்பளம்... இங்கேயிருந்து வீட்டுக்குப் போய் சாப்பிட்டுகிட்டு வர நேரம் கிடைக்காது. அதனுலே வெளியில் பக்கத்து ஹோட்டலுக்கு எங்காவது போய் ஏதாவது வாங்கித் திங்க தினசரி ஒரு ரூபா படி தருவாங்க... பிறகு இப்படி உங்க மாதிரி வருகிறவங்க தருகிற டிப்ஸ்...'

'உங்க முதலாளி சரியான ஆளுதான்... ஆமா...நீ படிச்சிருக்கையா?'

'ஆமா... பி. எ. யில் சேர்ந்து ஒரு வருஷம் போனேன்.'

கடைசிச் சொட்டை அருந்திவிட்டுத் தம்ளரை மேஜை மீது வைத்தேன்.

சிக்கனும், மட்டனும், ரொட்டியும் எல்லாம் வெறிக்க வெறிக்கப் பார்த்தவாறு என் முன்னே காத்திருந்தன.

'சரி ..சரி...நீ போய் அந்த வெளிக்கதவைச் சாத்தி தாள் போட்டுகிட்டுவா...'

அவன் ஒன்றும் புரியாதவனுய் என்னைப்பார்த்துவிட்டு, மெல்லக் கதவருகில் போய்க் கதவைச் சாத்திவிட்டு வந்தான்.

'அப்படி உட்காரு' என்று என் எதிரில் கிடந்த நாற்காலியை அவன் நேராகத் தள்ளினேன். அவன் கேள்விக்குறியாய் என்னைப் பார்த்தபோது, 'சும்மா உட்காரு ஜெயிம்ஸ். மணி இப்பவே பதினொன்று இருக்கும்... இனி எப்போ வீட்டுக்குப் போய் நீ சாப்பிடப்போறே? இன்னைக்கு ராத்திரி என் கூடத்தான் நீ சாப்பிடணும். அந்தக் கழுதைப்பயல் உன் முதலாளி ஏதாவது கேட்டா நான் சொல்லிக்கிறேன். நீ தைரியமா உட்காரு. உம்...' என்று நான் சத்தம் போட்டேன். நாணிக் கோணியவாறு அவன் உட்கார்ந்தான்.

இரண்டொரு பிளேட்டுகளை அவன் முன்னே நீக்கி வைத்து விட்டு நான் சாப்பாட்டில் ஐக்கியமானேன்.

'உம்... சங்கோஜப்படாமெ சும்மா சாப்பிடு ஜெயிம்ஸ்... இப்போ நீயும் நானும் சரிசமானம்... நமக்குள் எந்த வர்க்க வேற்றுமையும் கிடையாது...' என்று நான் ஊக்குவித்தபோது அங்கே இங்கே பார்த்தவாறு அவனும் சாப்பிடத் தொடங்கினுன்.

அவன் கன்னத்தில் அப்போதுதான் அரும்பிக் கொண்டிருந்த சிவந்த முகப்பருவையும், மூக்கில் துளிர்த்துக் கொண்டிருந்த வியர்வை முத்துக்களையும் பார்த்தவாறு நான் கேட்டேன்.

'உன் சொந்த ஊர் எங்கே?'

'மாவேலிக்கரை'

'இங்கே எங்கே வசிக்கிறே?'

'குன்னுகுழியில்'

'கூட?'

'வயசான அம்மா மட்டும்தான். அப்பா செத்துப் போனரு '

'கல்யாணம்?'

"இன்னும் ஆகவில்லே சார்... எங்க ரெண்டு பேரு வயிற்றுப்பாடே பெரும்பாடா இருக்கு அதுக்ககூடெ இன்னெரு ஜீவனேயும் கூட்டிகிட்டுக் வந்து எதுக்கு சார் கஷ்டப்படுத்தணும்?'

நான் பதில் ஒன்றும் சொல்லவில்லே. எனக்கு அகோரப் பசி. எனவே சாப்பாட்டில் முழுகினேன். இருந்தும் அவன் சாப்பிட்டுக் கொண்டிருக்கையில் சதைப் பாங்கான அவன் வலது கைப் புஜத்தின் இயக்கம் என் கண்ணே உறுத்திக் கொண்டிருந்தது.

தட்டுகள் காலியான பின் அவன் எழுந்து நின்ருன். 'சார்...உங்க கூட இப்படி நான் சரிசமதையா உட்கார்ந்து சாப்பிட்டதை எங்க முதலாளிகிட்டெ சொல்லிடாதீங்க. அவரு இதை அறிஞ்சா என் சீட்டுக் கிழிஞ்சு விடும்.'

"அந்த அற்பன் கிடக்கிருன்... விட்டுத்தள்ளு... முதலாளி... பெரிய முதலாளி...'

கைகழுவிவிட்டு வந்து நான் சிகரெட்டைப் பற்ற வைத்தபோது அவன் காலித்தட்டுக்களேயும், தம்ளர்களேயும், புட்டிகளேயும் எல்லாம் ட்ரேயில் எடுத்துக் கொண்டு திரும்பியவாறு, 'சார்...இனி ஏதாவது...?' என்று கேட்டான்.

'ஒரு பாட்டில் ஜின் கூட...'

என்னே ஒருமாதிரி பார்த்தவாறு, 'இன்னும் ஜின் தானு...?' என்று இழுத்தான்.

'ஆமா...'

'ஸோடாவும் வேணுமில்லே ?'

'ஆமா...'

அவன் கீழிறங்கிச் சென்ருன்.

எனக்கு இப்போ பரமானந்தமா இருக்கிறது. இந்த உலகில் நானே ராஜா என்ற மாதிரி ஒரு உவகைப் பரவசம்.

ரிக்கார்டு பிளேயரை இயக்கியதும், முப்பத்தி மூன்று ஆர்.பி.எம். வேகத்தில் சுழலத் தொடங்கிய இசைத்தட்டிலிருந்து ஸ்பானிஷ் ஜிப்ஸி டான்ஸின் ஆர்ச்சஸ்ட்ரா ஒலி விநோதங்கள் சொரு சொரு வென்று என் நரம்பு மூட்டங்களில் புகுந்து கொள்ளத் தொடங்கின.

சுழன்று கொண்டிருந்த மின்விசிறியின் காற்றில் அறையில் நடுநாயகமாகக் கிடந்த இரட்டைக் கட்டிலில் தொங்கிக் கொண்டிருந்த கொசுவலே படபடத்து என்னே அழைத்தது. காலில் கிடந்த ஷூஸைக்கூட கழற்ற மினக் கெடாமல் நான் எழுந்து போய் அந்தக் கட்டிலில் நீண்டு நிமிர்ந்து சாய்ந்தேன்.

சிகரட் புகை சிதறிக் கொண்டிருந்தது. கொசுவலேயின் வெளியில் மங்கலாய்த் தெரிந்த அறைச் சுவர்களின் இளம் நீல நிறம் ஒரு சொப்பனலோகமாய் என்னே என்னவோ செய்துகொண்டிருந்தது. இதயத்தின் அகக் கோடியில் இன்னதென்று தெரியாத ஒரு திமயக்கம்.

'சார்...'

நான் கண் திறந்து பார்த்தபோது நுரைததும்பும் கோப்பை இருக்கும் ட்ரேயை என் முன்னே நீட்டியவாறு வலேக்குள் அவன் நிற்கிருன். அவன் உதட்டுக்குள் ஒரு குறுநகை

தம்ளரைக் கையில் வாங்கிவிட்டு, 'பாட்டிலேயும் ஸோடாவையும் எல்லாம் இங்கேயே எடுத்துகிட்டு வா..' என்றேன் நான்.

அவன் எடுத்துக்கொண்டு வந்தான்.

'இப்படி உட்காரு ஜெயிம்ஸ்...'

'இல்லே சார்... இப்படியே நிக்கிறேன்...'

'சும்மா உட்காரு...'

அவன் கையைப் பிடிச்சு என் அருகில் கட்டிலில் உட்கார வைக்கிறேன். அவனேப் பார்த்துக் கொண்டே இருக்க விடாமல் என் இமைகள் என் அனுமதியின்றி அடைந்து அடைந்து போய்க் கொண்டிருந்தன. என் கழுத்துக்குத் தலே ஒரு பாரமாகத் தோன்றியது.

'சார்...உங்களே இந்த ஹோட்டலில் பாத்த அண்ணேயிலிருந்தே ஒரு விஷயம் உங்ககிட்டெ கேக்கணுமுண்ணு இருக்கேன். கேக்கட்டுமா சார்?'

'சும்மா கேளு...'

'தப்பா நினேச்சுக்க மாட்டீங்களே...'

'எதுக்கு நான் தப்பா நினேச்சுக்கணும்....நீ சும்மா கேளு ஜெயிம்ஸ்...'

சற்று நேரம் கூட தயங்கி விட்டு ஒருவித தடுமாற்றத்துடன் கேட்டான் அவன்.

'இல்லே சார்... இங்கே வருகிறவங்க யாருமே இப்படி எப்போதும் ஒரேயடியாய் ஒரே பானத்தையே குடிச்சுக்கிட்டிருப்பதை நான் பாத்ததில்லே. ஒவ்வொரு வாட்டியும் ஒவ்வொன்றை மாற்றி மாற்றி வாங்கிக் குடிக்கிருங்க... நீங்க மட்டும் எப்பப்பார்த்தாலும் ஜின்னே மட்டுமே குடிச்சுகிட்டிருக்கீங்களே... இதுக்கு விசேஷக் காரணம் ஏதாவது உண்டுமா?'

எனக்குச் சிரிப்பு வந்தது. சிரித்துக் கொண்டேயிருந்த எனக்கு அதை எப்படி நிறுத்துவது என்பது மறந்து போய்விட்டது போலிருந்தது. ஒருவாறு நிறுத்தி விட்டு. 'அது உனக்குத் தெரிஞ்சுதான் தீரணுமா?' என்று அவனிடம் கேட்டபோது அவன் முகத்தில் ஆவல் இன்னும் அதிகரிப்பது தெரிந்தது சிறிது சங்கோஜத்துடன், 'சொல்லுங்களேன் சார்... நானும் அறிஞ்சுக்கிறேனே.' என்ருன் அவன். 'சரி... சொல்லுதேன்...அதுக்கு முந்தி உங்கிட்டெ நான் ஒண்ணு கேட்கட்டுமா?'

அவன் விழிகள் என் விழிகளுடன் ஊடுருவின. 'கேளுங்கள் சார்' என்று அவன் கூறவில்லே. ஆனுலும் நானே கேட்டேன்.

'ஆமா .. நீ இந்த ஹோட்டலில் உள்ள லிக்கர்ஸில் எதையாவது ருசி பாத்திருக்கையா?'

'இல்லே சார்...'

'ஏன்?'

'எனக்குப் பழக்கமில்லே சார்... அதோடு...'

'அதோடு...?'

'வேறொண்ணுமில்லே நான் முதல்லேயே சொன்னேனல்லவா சார்...: இங்கேயிருந்து நாங்க யாருமே எதையும் ஓசியில் சாப்பிடக்கூடாது... காசு கொடுத்து வாங்கிச் சாப்பிட எனக்கு வசதியும் இல்லே...'

என் கையிலிருந்த தம்ளரை நான் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போதும் அடிக்கடி கீழிருந்து ஒரு சில நுரைகள் மேலேழும்பிக் கொண்டிருந்தன.

'சரி...முதல்ல நீ இதைக் குடிச்சுப்பாரு...'

அவன் முகத்தில் இப்போது ஒரு கிலி படர்ந்தது

'இல்லேசார்... வேண்டாம்...எனக்கு ஒத்துக்காது.'

'ஜெயிம்ஸ் இதுதான் எனக்குப் பிடிக்காதது. நீ கேட்டதுக்கு நான் பதில் சொல்ல வேண்டாமா? அதுக்க முந்தி இதுக்க ருசி என்னுண்ணு நீ அறிஞ்சுக்க வேண்டாமா?'

'இல்லே சார்... சார் பதில் சொல்லாவிட்டாலும் வேண்டாம். இதைக் குடிச்சா எனக்கு வாந்தி வந்து விடும்...'

'யாரு சொன்னு! நானல்லவா இங்கே உன் பக்கத்தில் இருக்கேன். சும்மா குடி...' என்று தம்ளரை அவன் உதட்டருகில் கொண்டு சென்றேன்.

'சார்... ஆராவது...'

'இது என் அறை. இப்போ இந்த அறைக்குள் என் அனுமதி இல்லாமல் சாட்சாத் உன் முதலாளி கூட வர முடியாது. கதவைச் சாற்றி தாட்பாள் போட்டிருக்கேயில்லே...?'

'போட்டிருக்கேன் சார்...'

'பிறகென்ன...!'

சிறிது நேரம் கூட பிகு பண்ணிவிட்டு முகத்தை அஷ்டகோணத்தில் கோணியவாறு அவன் தம்ளரைக் காலி பண்ணுவதைப் பார்க்க எனக்கு வேடிக்கையாக இருந்தது.

'சரி... அடுத்தது எனக்குத் தா...'

உதட்டைத் துடைத்துவிட்டு, 'கப்பைக் கழுவி விட்டு வாறேன் சார்...' என்றவாறு எழுந்த அவன் கையைப் பிடித்து உட்கார வைத்தபின், 'அதொண்ணும் வேண்டாம். இதிலேயே ஊற்று... இந்த ஜின்னைவிட உன் எச்சில் என்னை ஒண்ணும் செஞ்சுவிடாது ..' என்று நான் சொன்னபோது, மனதில்லா மனதுடன் அதே தம்ளரில் ஜின்னும், ஐஸ் துகள்களும், சோடாவும் கலந்து என்னிடம் நீட்டினுன் அவன்.

ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு அதை அவன் கையிலிருந்து வாங்கி அருந்தியவாறு கேட்டேன். 'சரி ஜின்னின் ருசி எப்படியிருக்கு?'

'எனக்கு ஒண்ணும் தெரியவில்லே சார்... மருந்து குடிப்பது போல் மடமடன்னு குடிச்சுட்டேன்.'

'மணம்?'

'எனக்குச் சொல்லத் தெரியவில்லே.'

'சரி...கொஞ்சம் கூட குடிச்சுப் பாத்துவிட்டுச் சொல்லு பாப்போம்...' என்றுவிட்டு என் கையிலிருந்த தம்ளரைக் காலிபண்ணி அவன் கையில் கொடுத்தேன்.

'சார்...அதிகமா சாப்பிட்டா உடம்புக்கு..' நான் சிரித்தேன்.

'என்ன ஜெயிம்ஸ்...இப்படி அசட்டுத்தனமா கேக்கிறே...நீதானே இண்ணைக்கும் எண்ணைக்கும் எனக்கு இதை உன் கையாலே தந்துகிட்டிருக்கே... எனக்கு இப்போ என்ன ஆயிட்டது?'

'ஆனுலும்...' என்றவாறு தம்ளரை நிரப்பினன். இப்போது அது நான் எச்சிலாக்கின தம்ளர் என்று அவன் சொல்லவில்லை என்பதை நான் கவனித்தேன், அது மட்டுமல்ல, இப்போது அதன் சுவையையும், மணத்தையும் அனுபவித்தவாறு அவன் குடிப்பது போலிருந்தது.

'சரி...இப்போ சொல்லு பாப்போம்...'.

சிறிது நேரம் குழம்பிவிட்டுத் தன் தோல்வியை ஒப்புக் கொள்ளும் ஒரு தொனியில் 'எனக்குச் சொல்ல தெரியமாட்டேங்குது சார்...'என்று ஒரு வித தடுமாற்றத்துடன் சொன்னுன்.

'சரி...அப்படீன்னு நானே சொல்லுதேன்...இந்த ஜின்னின் ஸ்வீட் ஸ்மெல் பெண்களுக்கு ரொம்பப் பிடிக்கு முண்ணு என் நண்பன் ஒரு மடையன் எங்கிட்டெ முன்பொருதடவை சொன்னுன். அதைக் கேட்டுத்தான் எப்போ பாத்தாலும் இதை மட்டுமே குடிச்சு என்னை நான் ஏமாற்றிக்கிட்டிருக்கேன்...'

ஜெயிம்ஸ் இப்போது வாய்விட்டுச் சிரித்தான். நல்ல ஒரு டூத் பேஸ்ட் விளம்பரச் சிரிப்பு...

'அப்படியா சார்... அது வாஸ்தவம் தானு?'

அவன் கேள்வியில் அபரிமிதமான ஒரு ஆவல் தொக்கி நின்றது.

'அதுதான் எனக்கும் இதுவரை விளங்கவில்லே.'

என்னவோ நினைத்துக் கொண்டதுபோல அவன் திடீரென்று கேட்டான் 'சார் உங்களுக்கு இன்னும் கல்யாணம் ஆகல்லையா?'

'எண்ணைக்கோ ஆயிட்டுதே'

'பிறகென்ன! அவுங்ககிட்டெயிருந்துமா தெரிஞ்சுக்க முடியல்லே?'

'முடியல்லையே...'

'ஏன் சார்?'

'இந்த ஸ்மெல் எங்கிட்டெ இருந்து வராத காலத்திலிருந்தே அவளுக்கு என்னைப் பிடிச்சிருக்குண்ணு எனக்குத் தெரியும். பிறகு இதை அவகிட்டெப்போய் எப்படி டெஸ்ட் பண்ணிப்பாப்பது ?'

தம்ளரை நாங்களிருவரும் பரஸ்பரம் கைமாற்றிக் கொண்டிருந்தோம். பாட்டில் தீர்ந்து கொண்டே இருந்தது.

இப்போது அவன் கழுத்துக்கும் தலை ஒரு பாரமாய்ப் போய்விட்டது போலிருந்தது. இமைகளை ஒரே சீராய்த் திறந்து வைக்க முடியாமல் அவனும் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்தான்.

'சரி...சரி...அதெல்லாம் இருக்கட்டும் ஜெயிம்ஸ். உனக்கு இந்த ஸ்மெல் பிடிச்சிருக்கா?'

'சார்...இந்த ஹோட்டலில் எல்லோருக்கும் இதை செர்வ் பண்ணிகிட்டிருப்பவன் நான். எனக்குப் பிடிச்சிருக்காம இருக்க முடியுமா?'

'அதில்லே...இதைக் குடிச்ச என் ஸ்மெல்லோடு சேந்து வருகிற இதன் ஸ்மெல் உனக்குப் பிடிச்சிருக்கா?'

சிறிது நேரம் என்னவோ ஆலோசிக்கும் தோரணையில் என்னைப் பார்த்தவாறு மௌனமாக இருந்தான் அவன். பிறகு சரிவர தெளிவில்லாத வார்த்தைகளால் என்னிடம் கேட்டான்.

'இதைக் குடிச்ச என் மணத்தோடுச் சேந்து வருகிற இதுக்க மணம் சாருக்குப் பிடிச்சிருக்கா சார்?'

'பிடிச்சிருக்கு'

'அப்போ சரி...எனக்கும் பிடிச்சிருக்கு..' என்றவாறு உட்கார்ந்திருக்க முடியாத ஒருவித தடுமாற்றத்துடன் கட்டிலில் என் அருகில் சாய்ந்தான் அவன்.

இலக்கியப் பத்திரிகை என்ருல் அதன் தபால்களில் பெரும்பாலும் கவிதைகளாகத்தான் இருக்கும். 'கசடதபற'வுக்கு வந்த கவிதைகளில் பொறுக்காமல் சிலவற்றைத் தருகிருேம் — ஒரு மாதிரிக்காக.

—(ஆ-ர்)

## விழிவிழிப்பு

ஐயா, புதுக்கவிதைக்காரரே
நிறுத்தும் நிறுத்தும்
பிறப்பு விகிதம் அதிகம்
ஏழுஎட்டு மாதத்திலேயே
அதிகப்பிரசங்கியாய்த்
துளிர்த்தீரோ—
காப்பு வாயுப்பெட்டி
இங்கில்லை—அமெரிக்கா!
கணையாழி ரதமோடு
க ச ட த ப ற மூன்றே
பிரசவ விடுதி—
இடமோ கொஞ்சம்
படுக்கையும் நிரம்பி
உம் பொன்குஞ்சின்
குரலினிமை கேட்காமல்
அடைந்தன —
லூப்பு மாட்டுவீரோ
அறுத்து விடுவீரோ
கைவைத்தியக்காரராய்
பெற்றும் விடுவீரோ...

—பா. ரவிகுமாரன்

## அப்பாவியே...

கனமான யந்திரச் சுழல்கள்,
தலைசுற்றும் சின்ன ஒயர்கள்,
அவற்றின் நுணுக்கக்
கோப்புகளை
பாட்டரி மூலம்
உயிரேற்றி யபின்
காற்றின் மூலம் வந்த
ஒலிகளை அப்படியே
ஒப்பிக்கின்ரு ய்வா
ஞெலிப் பெட்டி யே
பொண்டாட் டிக்குப் பயந்த
பேடியைப் போல!

—வேதம்

## 'தன்'மை

இடிக்காகவே
கூட்டத்தில்
போவான்.
இடித்துக்கொண்டே
பஸ் ஏறுவான்.
'திருவிழா' என்று
மனைவி சொன்னல்,
'போகாதே பொறுக்கிக் கும்பல்'
என்பான்.

—து. ரா.

## சிவப்பு விளக்கு

எல்லா மெழுகுவர்த்திகளுமே
எரிய வேண்டியதுதான்
பாவம்...அவற்றில் சில
சூதாட்ட மேஜையில்தான்
எரிய வேண்டுமா? என்ன?
எத்தனை தேவாலயங்கள்
திறந்து கிடக்கின்றன.
இவற்றில் ஏதாவது ஒன்றில்
அவை எரியக் கூடாதா.
அட கடவுளே!

—தேவிப்பிரியா

## நான் குளம்...

நாளை பெய்யும் மழையில்
நான் நிரம்பி விடுவேன்
நேற்றுவரை......
குடிக்க நீர் கொடுத்தேன்,
குளித்துத் துவைத்தனர்.
குதித்து விளையாடிக்கூட
என் மீது
படகு விட்டனர்.
வயிறு புடைக்கத் தின்று
ஏப்பம் விட
கொக்குகளுக்கு மீன் கொடுத்தேனே...!
மீனுக்கு என் 'பாசம்'
இரையாக வில்லையா?
ஏன்?
இன்று கூட என்மேல்
படிந்து கிடக்கும் அழுக்கை
உரமாக்குகிறீர்களே!
நான் என்ன கெட்டுவிட்டேன்...?
நாளை பெய்யும் மழையில்
நான் நிரம்பி விடுவேன்.

—ஆ. சந்திரபோஸ்

## விசிறி

'கசடதபற'வுக்கு
நான் விசிறி.
'கசடதபற'
எனக்கு விசிறி.
கனமாகப் போட்டால்
புழுங்கும்போது
விசிறிக்
கொள்ளலாம்!

—பரந்தாமன்

# நடந்தாய் வாழி காவேரி

(சிட்டி, தி. ஜானகிராமன். படங்கள்: கலாசாகரம்; முதற்பதிப்பு: ஜூலை 1971. விலை ரூ. 10/- பக்கங்கள் 287. பதிப்பகம்: வாசகர் வட்டம், 14, தணிகாசலம் செட்டி தெரு, தியாகராய நகர், சென்னை-17.)

எத்தனையோ நூற்றாண்டுகளாகத் தமிழகத்தின் வாழ்வுக்கு—கலைகள், சமயங்கள், தத்துவச்சிந்தனைகள் அடங்கிய பூரண வாழ்வுக்கு—வளம் சேர்த்துவரும் காவேரியைக் காண இருபதாம் நூற்றாண்டின் அவசர சாதனமாகிய மோட்டார்காரில் புறப்பட்டிருக்கிறார்கள் நண்பர்கள்.

'காவேரிக் கரையோடு போகவேண்டும் என்றால் பல பாகங்களில் நடந்தோ, சைக்கிளிலோ, கட்டை வண்டியிலோதான் செல்ல முடியும். கரையோடு முடியிலிருந்து பாதம்வரை செல்ல எத்தனையோ மாதங்கள் பிடிக்கும்; அப்படிப் பார்ப்பதென்றால் நாயன்மாராக வேண்டும். ஆழ்வாராக வேண்டும்; குறைந்தது, பண்டாரம் அல்லது ஹிப்பியாகவாவது இருக்க வேண்டும். இதில் எந்த ரகமுமல்ல நாங்கள்' என்கிறார்கள் ஆசிரியர்கள்.

அவர்கள் பார்த்த வரையில் பயன்தான் நமக்கு; அத்தனையும் ஆதாயம்தான். சொல்லியிருப்பது சுவையாக இருப்பதனால்தான் இன்னும் எல்லாவற்றையும் பார்க்கவில்லையே என்று நம்மை ஏக்கம் கொள்ளச் செய்கிறது.

'எதையும் முழுவதும் பார்க்க முடியாது. உள்ளங்கை ரேகையையே ஒரு வாழ்நாள் முழுவதும் பார்த்துக் கொண்டிருக்கலாம்.'

'உமையாள் புரத்தைக் கடக்கும்பொழுது ஒரு சித்திரம் அகக்கண்முன் வந்தது. தியாகையரின் சீடரான சுந்தர பாகவதரின் வம்சத்தில் பிறந்த ஒருவர் தன் பாட்டி நாள்தோறும் இருள் பிரியுமுன் விடியற்காலையில் எழுந்து, தியாகையர் யதுகுல காம்போஜியில் இயற்றிய ராம நாமப் பாட்டை கணீர் என்ற குரலில் பாடியவண்ணம், தெருவோடு நடந்து காவிரிக்குக் குளிக்கச் செல்லுவாள் என்று சொல்லி அதே போல் அதைப் பாடிக் காட்டினார். அதைக் கண்ணை மூடிக்கொண்டு கேட்ட ஞாபகம். இருளையும், காவிரிக் கரை ஊரையும் மனதில் பார்க்கக் கண்மூடிக் கொண்டது. இருள் பிரியாத விடியற்காலை, நிசப்தம். மேலே நட்சத்திரங்கள் — கிழக்கே வெள்ளி — எங்கும் ஒரு வலியனின் கூவல்—எங்கோ கொட்டிலில் வைக்கோலை மாடு பிடுங்கும் ஒலி-தென்னங் கீற்றுகளின் சலசலப்பு —நிர்மலமான இதயம்—எங்கிருந்தோ ஒரு முதிய பெண்குரல் பாட்டைத்தொடங்கி, அந்த ஒலி அருகே உயர்ந்து உயர்ந்து வந்து பின்பு தேய்ந்து கொண்டே சென்று காவிரியின் சுழிப்பில் கரைகிறது. இத்தனையையும் அந்தக் கணத்தில் கேட்டு வசம் இழந்த நினைவு. இப்பொழுது அந்தக் கணத்தை மீண்டும் வாழ்கிறது நெஞ்சு. கண் மூடிய வாறே இருந்தது.'

'நிலவு வெண்மேகங்களூடே உறங்கிக் கொண்டிருந்த இரவு அது. குளிர்ந்த காற்று. வெளியே சிமெண்ட்டு பெஞ்சில் வந்து உட்கார்ந்தோம். உயரமான பாலத்தின் கீழ் காவேரி சலசலத்தது. ராமநாதன் ஆலயத்தின் முதுகைத் தவழ்ந்து வந்து காவேரியின் வெள்ளி நீர்க்கூட்டம் நதி, கோவில், இயற்கை வனப்பு இவையெல்லாம் மையமாக ஒன்றி நின்று ஒரு வாழ்க்கை முறையை உருவாக்கிய பழைய காலத்தில் வாழ்வது போலிருந்தது. தெருக்களில் மின் விளக்குகள் அணைந்துவிட்டன. கார், லாரிகளின் ஓசையும் இல்லை. எனவே முந்திய காலம் ஒன்றிற்குத் திரும்பிப்போன மயக்கம் பூர்ணமாகிக் கிடந்தது. நிகழ்காலமும் எதிர்காலமும்தான் முக்கியம் என்று நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். அந்த உணர்வுதான் நம் கடமையும்கூட. ஆனால் நடுநடுவே இத்தகைய மயக்கங்களும் தேவை என்று தோன்றி விடுகிறது. பாலம், காவேரி, கோவில், நிலவு, நிசப்தம், ஆழ்ந்த அமைதி. இவற்றைச் சேர்க்கும்போது, அவற்றில் ஒன்றித் தோய்ந்த போது, இடை இடையே இந்த மாதிரி பழமையில் புகுந்து கொள்வது ஒரு ஆறுதல் என்றே தோன்றிற்று. உயிர்களின் குளிர்காலத் தூக்கம் போல, செயலோய்வு போலிருந்தது. எதிர் காலத்திற்கான சக்திகளைத் திரட்டிக் கொள்ள உதவும் ஓய்வாகத்தான் அன்று கண்ட கனவு நிலை இருந்தது.'

இப்படி, காவேரிக்கரையையே காணாதவர்களிடத்தில்கூட கண்டுவிட்டதான அனுபவத்தைத் தோற்றுவிக்கும் அற்புதமான வர்ணனைகள் - அங்கங்கே.

மற்ற இடங்களில் அரசாங்கப் பதிவேடுகள் போல வறட்டு விவரங்கள். பயணக் கதை என்று குறிப்பிட்டிருக்கிறார்கள் முன்னுரையில் ஆசிரியர்கள். கதை எழுதத் தெரிந்தவர்கள் எழுதிய விவரங்களாக இல்லை. பள்ளிக்கூடத்துப் பூகோளப் புத்தகங்களை நினைவூட்டும் 'பயனுள்ள' விவரங்கள்.

மேகதாட்டு என்ற இடத்திலுள்ள பாறைகளை இரண்டு பக்கம் வர்ணித்திருக்கிறார்கள். கற்பாறைகளாகிய புவி இயல் அதிசயங்களுக்கு உயிர் வடிவம் தரத்தக்க அளவு வர்ணித்தவர்களா இந்த வெறும் விவரங்களையும் சேர்த்திருக்கிறார்கள்? நம்பத்தான் முடியவில்லை.

'காவேரி வெறும் ஆறுமட்டுமல்ல; அதன் கரையில் வாழும் மக்களின் பண்பை விளக்கும் வரலாற்று ஓவியம்' என்கிறார்கள் ஆசிரியர்கள். ஆனால் பயணக் கதையில் கோயில்கள், நினைவுச் சின்னங்கள் இடம் பெற்ற அளவு காவேரிக் கரையில் வாழும் மனிதர்கள் - வாழ்ந்து கெட்டவர்கள், வசதியாய் வாழ்பவர்கள் - இடம் பெறவில்லை என்றே தோன்றுகிறது. நதிக் கரைகளில் எத்தனைத்தொழில்கள், எத்தனைப் பழக்கங்கள்; ஆசிரியர்களைச் சிலமனிதர்கள்தாங்களாகத்தேடி வந்திருக்கிறார்கள். மற்றபடி இவர்கள் பிரயாசை எடுத்து நிகழ்காலக் கதைகளைத் துருவியதாகத் தெரியவில்லை. இலக்கியம், சங்கீதம், ராஜரீகம், மதம் இந்தத் துறைகளில் வாழ்ந்த பழங்காலப் பெரியவர்கள் இந் நூலில் சரியாகவே இடம் பெற்றிருக்கிறார்கள்.

திருச்சியிலும், கும்பகோணத்திலும் ஆசிரியர்கள் முறையே பல ஆண்டுகள் வசித்திருந்ததாகச் சொல்கிறார்கள். ஆனால் ஆடிப் பெருக்கு பற்றி ஒருவரிகூட இல்லாமல் காவேரியைப் பற்றி பயணக் கதை எழுதி விட்டார்கள்.

வாரச் சந்தையைப் பற்றி ஏக்கம் தோன்ற வர்ணித்திருப்பவர்கள், ஆடிப் பண்டிகையைக் குறிப்பிட மறந்தது அதிசயம்தான்.

'ஒருவாறாக எழுதிமுடித்து விட்டோம்' என்று அவர்களே குறிப்பிடுகிறார்கள்.

ஆனால் எதைப் பார்த்தோம்? பல கோவில்கள், சில பாலங்கள், சில கிளை நதிகள், சில மனிதர்கள், சில கல்லறைகள், சில ஆலைகள், சில பழமைச் சின்னங்கள்.

எல்லா 'சில'க்களையும் கூட்டினால் பல ஆகும். ஆனால் எல்லாம் ஆகிவிடாது.

காவேரி நடக்கிறாள். நடந்து வாழ்வளிக்கிறாள் காவேரியை வாழ்த்த இன்னும் எத்தனையோ காவிய கர்த்தாக்கள் தோன்றுவார்கள்.

'தமிழர்கள் பாக்கியசாலிகள்;. தங்கள் பாக்கியத்தைப் புரிந்துகொள்ளத்தான் அவர்களுக்குத் தெரிவதில்லை.' இது க.நா.சு. வேறு ஒரு சந்தர்ப்பத்தில் எழுதியது. 'நடந்தாய்; வாழி, காவேரி' புத்தகத்திற்கும் இது பொருந்தும்.

இப்படி ஒரு புத்தகம் - தென்னாட்டின் ஜீவ நதியாகிய காவேரியைப் பற்றி - சிட்டியும், தி. ஜானகிராமனும் எழுதி - கலாசாகரம் ஓவியங்களுடன் - கண் நிறைந்த புகைப் படங்களுடன் - ரூபாய் பத்துக்கு. தமிழர்கள் பாக்கியசாலிகள்தான்.

—ஆர். சுவாமிநாதன்.

---

(4-ஆம் பக்கத் தொடர்ச்சி)

"என்னம்மா நீ சும்மாச் சும்மாக் கூட்டுண்டு." சிணுங்கியபடியே வந்தது ஒரு 5 வயதுப் பெண். மனதில் நிழலாடிற்று. பரிச்சயமான பார்த்த ஒரு முகத்தின் சாயல். யாரு...யாரு அந்த கோபால கிருஷ்ண.. ஓ...தீடீரென்னு என்னை நமஸ்கரித்தாள்

"நீலுமாமிக்கு நமஸ்காரம் பண்ணு"

"ஏதுக்குடி ...சும்மாயிரு ..நீ வெளையாடப்போம்மா கொழந்தே..."

"அப்பிடிச் சொல்லாதேங்கோ பெரியவள் எத்தனைதரம் பண்ணா என்ன தேஞ்சா போயிடும்" குழந்தை நமஸ்காரம் பண்ணிவிட்டு ஓடிற்று. பேச்சு. சுற்றிச் சுற்றி பேச்சு. கடைசியில் சொன்னாள்.

"இப்பிடி நின்னுண்டிருக்கேளே...... மாமிகூட துணைக்குப் போய் பஸ் ஏத்திட்டு வரப் படாதா?"

"நெனச்சேன்"

"ஒங்களுக்கு எல்லாத்துக்கும் நெனக்கணும். அப்பறம் ஆராயணும் சட்டுனு போவேளா?"

"தோ" என்று கிளம்பினான்.

தெருவில் ஒரே நெரிசல். எதற்கோ எங்கோ இடையறாது ஓடிக்கொண்டேயிருக்கும் ஜனமந்தை. கொஞ்சதூரம் கொஞ்சநேரம் மௌனநடை. இரண்டு மூன்று தடவை தொண்டையைச் செருமிக் கொண்டான். வலி குடைகிறாற்போல் ஒரு வேதனையின் செருமல். தீடீரென்று சொன்னான்:

"ஒங்களுக்குப் புதுஸ்ஸா இருக்கும். பெரிய அதிர்ச்சியாக்கூட இருக்கும். ஆனா நேக்கு எதுவுமே தோணலே. அர்த்தப்படலே. எல்லாத்தையும் அர்த்தப் படுத்திண்டு எது எதுக்கோகாவந்து பண்ணிண்டு, நாமதான் கட்டிக்காக்கருப்பிலே நடுங்கிச் சாறவரைக் குந்தான் எல்லாம். எல்லாத்திலேயும் அப்பிடிப்பாக்கற தெம்பு வேணும். அதுக் கெல்லாம் ஒரு தனீப் பக்குவம் வேணும். மனசை மகான் மாதிரி இழுத்த இழுப்பிலே வெச்சுக்கத் தெரியணும். எல்லாமே ஒரு விளிம்போட் சரி. அப்பறம் ஒண்ணுமில்லே. நீ நான் என்னுது உன்னுதுன்னு இருந்தாத்தான் எல்லாம். நீங்க இதையெல்லாம் அசட்டுத் தனம்பேள். நேக்கு அப்பிடிப்படலே.

"ஒரு விதத்துலே பாத்தா ரொம்பத் தெம்பாக்கூட ஊறிடுத்து. அதான் சொன்னேனே ரோடுன்னு. காரும் போகும் ஸ்கூட்டரும் போகும். லாரியும் சைக்கிளும் போகும். என்னவோ ஒரு ஓட்டம். வெடிஞ்சு எழுந்தா நாள் தவறாமே வெதவெதக்கிற வென்னீர்க் குளியல். நன்னாத் தேங்காப்பூத்தூவாலையாலே—அவதான் துவட்டுவ எண்ணெய் தேச்சுவிடரதும் அவதான். குளிச்சு முடிச்சதும் சூடாகாபி. எட்டுமணியானாண்ணு பூப்பூவா இட்லி. 1 மணிக்குத் திவ்யமான சாப்பாடு. மூணுமணிக்குக் கேக்கற டிபன். நடுவில் நொறுக்குத் தீனிவேற. இராத்திரியும் ஒரு வெட்டு. மேலேவேணும்னு இஷ்டப்பட்டா நானும் நனைஞ்சுக்கலாம். இத்தனைக்கும் ஒரு துரும்பைகிள்ளி அந்தண்டை இந்தண்டை போட வேண்டாம். அரண்ணு ஒண்ணு போட்டாச்சு. இப்பன்னு இல்லே. அப்பவும் உண்டு. நேக்குத்தெரியலே. அப்படியொரு தேஜஸ் மயக்கம். ஏத்தம் இறக்கமெல்லாம் தண்ணி எறைக்கற மாதிரி... தெய்வம் வாழற உடம்பு. எல்லாமே அவ்வளவு திட்டம். கச்சிதம். தேவசங்கல்பம். எப்ப காச்சு... எப்ப பழுத்து... மூன்று வேளைக்கும் ஜாம்ஜாம்னு சாப்பாடு. வாரந்தோறும் எண்ணெய் தேச்சுக் குளியல். அதுவும் அவ கையாலே. எல்லாம் எதுக்கு? எப்பவோ ஒருகயத்தை 'மாங்கல்யம் தந்துனானே'ன்னு கட்டினதுக்கு... இதுக்குமேலே எதிர்பாக்கலாமோ?" விருட்டென்று போனான். திரும்பியபோது அவன் கையில் ஒரு அரைடஜன் ஆப்பிளும் இரண்டு டஜன் மலை வாழைப் பழமும் இருந்தது.

"எதுக்குடா கிச்சா இதெல்லாம் நீயே கஷ்டப் பட்டுண்டு..."

"ஹஹ்ஹா... கஷ்டமா... நேக்கா... நன்னாருக்கு. நானா கஷ்டப் படறேன். என்ன மாதிரி திவ்யமான வாழ்க்கை யாருக்குக் கெடைக்கும்? ஏதோ ஊர்ல நாலு கொழந்தைகளுக்கு ட்யூஷன் சொல்லிக் குடுக்கறேன். மத்தபடி துரும்பு கிள்ளிப்போடாத வாழ்க்கை" என்றவன், "மாமாகிட்ட நா ரொம்ப கேட்டதாச் சொல்லுங்கோ. மறக்காம, போற வழியிலே எங்கேயும் போட்டுடாமெ அவரிட்ட குடுங்கோ. என்ன வரட்டுமா? அவ காத்திண்டிருப்பா... நா இல்லாட்டா நிமிஷம் தாளாது அவளுக்கு. கொழந்தைகள் வேற காத்திண்டிருக்கும். வரட்டுமா... பத்திரமாப் போங்கோ. போய் லெட்டர் போடுங்கோ. வாட்டுமா... வரேன்."

கைகள் காற்றைக் கிழிக்க, கால்கள் எட்டி வீசி அந்தத் திருப்பத்தில் குச்சியாகி சட்டென்று மறைந்தான் அவன்.

# அக்கம் பக்கம்

சென்ற இதழில் 'கமலாம்பாள் சரித்திர'த்தைக் 'கணையாழி'யில் தொடராக வெளியிடுவது பற்றி என்னுடைய அபிப்ராயத்தை வெளியிட்டிருந்தேன் அதைத் தொடர்ந்து பல்வேறு அபிப்ராயங்கள். என்னுடைய நிலையை மீண்டும் தெளிவாக்குவது அவசியமென்று நினைக்கிறேன்.

'கமலாம்பாள் சரித்திரம்' வெளிவந்து ஒரு தலை முறை கழிந்து இரண்டாம் தலைமுறை உருவாகிவிட்டது. புத்தகமும் சரிவரக் கிடைக்காத நிலையில் அதைத் தொடராக வெளியிடுவதில் தவறில்லை. 'கல்கி'யும், பி.ஆர். ராஜமையரும் உங்களுடைய பார்வையில் ஒன்றாகப் பட்டிருப்பது விநோதம்" என்பது போன்ற வாதங்கள் எழுந்துள்ளன.

'கமலாம்பாள் சரித்திரம்' இலக்கியத்தரமான படைப்பு என்பதில் எனக்குத் துளிக்கூடக் கருத்து வேற்றுமை கிடையாது. எனது ஆட்சேபணையெல்லாம் பத்திரிகையில் மீண்டும் தொடராக வெளியிடுவது பற்றிதான்.

'கமலாம்பாள் சரித்திரம்' இலக்கியப் படைப்பு என்பது போலவே 'பிரதாப முதலியார் சரித்திரம்,' புதுமைப் பித்தன் கதைகள், கு.ப. ராஜகோபாலன் கதைகள், க.நா. சுப்ரமண்யத்தின் நாவல்கள், சுந்தரராமசாமி கதைகள், ரசிகன்கதைகள், உ.வே. சாமிநாதய்யர் உரைநடை, முதலானவைகளும் இலக்கியப் படைப்புக்கள் தான். ஏதோ ஒரு காரணத்தைக் காட்டி இவைகளைத் திரும்பப் பிரசுரித்து மகிழலாம்.

இந்தத் தலைமுறையினருக்காகத்தான் 'கல்கி'யின் எழுத்துக்களை மீண்டும் பிரசுரிக்கிறோம் என்பதுதான் 'கல்கி' பத்திரிகை சொல்லும் காரணமும். 'கல்கி' அளவில் 'கல்கி' இலக்கியகர்த்தா. நம்மளவில் பி.ஆர். ராஜமையர் இலக்கியகர்த்தா. எனவே 'கல்கி' செய்யும் காரியத்தைக் கண்டிக்கும் போது நாம் செய்யும் காரியத்தையும் கவனிக்க வேண்டும். இதுதான் என்னுடைய நிலை.

ஃ ஃ ஃ

தமிழக அரசு தன்னுடைய பரிசளிப்பிற்குப் புத்தகங்களை வரவேற்றிருக்கிறது. வேலைக்கு அப்ளிகேஷன்போடுவதுமாதிரி—எழுத்தாளர் அல்லது பதிப்பாளர் 1966-1970 வருடத்தில் வெளியான ஒவ்வொரு புத்தகங்களிலும்—புத்தகங்கள் விலை போவதே பெரும்பாடாக இருக்கிற நிலையில்—ஆறு பிரதிகள் அனுப்பவேண்டுமாம். இது மிகவும் வேடிக்கையாக இருக்கிறது. இலக்கியத்தரம் வாய்ந்த புத்தகத்திற்குப் பரிசளிக்க முன்வந்திருக்கும் அரசாங்கம் தான் வெளிவந்துள்ள புத்தகங்களை வாங்கி மதிப்பிட வேண்டும். அதை விட்டு விட்டுப் புத்தகம் வெளியிட்டவர்களிடமே பிரதிகளைக் கேட்பது எப்படி நியாயமாகும்?

ஃ ஃ ஃ

இந்த இதழோடு 'கசடதபற' ஆரம்பித்து ஒரு வருஷம் பூர்த்தியாகிறது. ஒவ்வொரு மாதமும் பதினாறு பக்கங்களில் எங்களால் முடிந்த அளவிற்கு அதிக பட்சமான படைப்புக்களைத் தந்திருக்கிறோம். இந்த 192பக்கங்களில் வளர்ந்து வரும் தமிழ் இலக்கியத்தின் போக்கை— இளைய தலைமுறையினரின் எண்ணங்களை—ஓரளவிற்குக் கோடி காட்ட முடிந்தது என்றாலும், கணிசமான அளவிற்குச் செய்ய வேண்டிய காரியங்கள் பாக்கியிருக்கின்றன என்பது வெளிப்படை.

சிறிய பத்திரிகைகளுக்குப் பொருளாதாரம் பெரிய பிரச்னை. முழுக்க முழுக்க வாசகர்களை நம்பியே வாழும் நிலை. காகிதம், அச்சு, தபால் கட்டணம், மற்றும் இதர செலவுகள்—இப்படிப் பலதுறைகளிலும் விலைவாசிகள் உயர்ந்து வரும் நாளில் பக்கங்களை அதிகரிப்பது என்பது இயலாத காரியம். சந்தாவைக் கூட்டுவதுதான் சாத்யமான ஒன்று. பல காரணங்களைக் கூறி இதைச் செய்வது தமிழ்ப்பத்திரிகை உலகில் தவிர்க்க முடியாத, வழக்கமான செயலாகி விட்டது. இது தமிழின் துர்ப்பாக்கிய நிலை.

'கசடதபற' வைப் பொறுத்த வரையில் பக்கங்களைக் குறைக்கப் போவதில்லை. வரும் இதழ்கள் 16 பக்கங்கள் தான். சந்தா வருஷத்திற்கு ரூபாய் மூன்று. இவைகளில் மாற்றம் இல்லை. ஆனால் பத்திரிகையின் அளவில் சிறியதொருமாற்றம். Double Demy அளவிலிருந்து Double Crown ('கணையாழி' அளவு) அளவிற்கு மாற்றத் தீர்மானித்துள்ளோம். விளம்பரம் போன்ற வசதிகள் பெருகுமானால் பக்கங்களைக் கூட்ட முடியும். அதுபற்றி இப்போது எதுவும் சொல்ல முடியாது.

பதிமூன்றாவது இதழில் இந்திரா பார்த்தசாரதியின் 'மழை' நாடகத்தை முழு அளவில் அளிக்க உத்தேசம். 'கசடதபற' அளவில் 40பக்கங்களுக்குக் குறையாமல் இருக்கும்.

இலக்கிய வாசகர்கள் செய்ய வேண்டியது இதுதான், தங்கள் சந்தாவைப் புதிப்பித்துக் கொண்டால்மட்டும்போதாது. தங்களுடைய நண்பர்களையும் 'கசடதபற'வின் இலக்கிய முயற்சிக்கு ஆதரவாக—சந்தாதாரர்களாக்க வேண்டும் என்பதுதான் எங்களுடைய அன்பான வேண்டுகோள். இந்த நேரத்தில் எங்களுடைய சிறு முயற்சிக்குப் பல வழிகளிலும் ஒத்துழைப்பு நல்கி வரும் நண்பர்களுக்கு எங்களுடைய மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

—நா: கிருஷ்ணமூர்த்தி

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swa… at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Deva… Street. Madras-4.